சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல் வரிசை - 1

# பண்பாட்டு நகர்வுகள்

## தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு

முனைவர் செ. இராஜேஸ்வரி, M.A., M.Phil., Ph.D.,



வெளியீடு :

நெருஞ்சி
இலக்கிய இயக்கம்
தஞ்சாவூர் - 613 001

*சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல் வரிசை - 1*

# பண்பாட்டு நகர்வுகள்

## தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு

**முனைவர் செ. இராஜேஸ்வரி M.A., M.Phil., Ph.D.,**

*வெளியீடு:*

நெருஞ்சி
இலக்கிய இயக்கம்
தஞ்சாவூர் - 613 001

## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூல் வரிசை | : | சமூகப்பண்பாட்டு ஆய்வு<br>நூல் வரிசை - 1 |
| நூலின் பெயர் | : | பண்பாட்டு நகர்வுகள்<br>தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு |
| துறை | : | சமூக பண்பாட்டு ஆய்வு |
| ஆசிரியர் | : | முனைவர் செ. இராஜேஸ்வரி |
| வடிவமைப்பு | : | செ. மீனாட்சி |
| பதிப்பாளர் | : | நெருஞ்சி இலக்கிய இயக்கம்<br>தஞ்சாவூர்–613 001; Mob. - 7598478793 |
| பதிப்பு | : | 2020 |
| மொழி | : | தமிழ் |
| பக்கங்கள் | : | 180 |
| விலை | : | Rs.200/- |

- - - - -

| | | |
|---|---|---|
| Book | : | A Series of Socio Cultural Study -1 |
| Tittle | : | Panpaattu Nakarvukal – Tamil Nadu to Japan |
| Subject | : | Socio Cultural Studies |
| Author | : | Dr.C.Rajeswari, M.A., M.Phil., Ph.D., |
| Designer | : | C. Meenatchi |
| Publisher | : | Nerunji Ilakkiya Iyyakkam<br>Tanjore–613 001; Mob. - 7598478793 |
| Publish | : | 2020 |
| Pages | : | 180 |
| Price | : | Rs.200/- |

# அன்புக் காணிக்கை



**சென்னை ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் ஜப்பான் மொழி கற்றுத் தந்த செல்வி. யூகோ ஃபுக்குரோயிக்கு இந்நூல் அன்பு காணிக்கை.**

Dr.C. Rajeswari has helped for me in conducting the Japanese classes for the Beginners as an assistant teacher. She is a knowledgeable instructor who is eagerly sought after by young students of Japanese. Her collaborative effort in the preparation for Learn Japanese – Part I and Part II, a textbook for Japanese language deserves special mention here.

Her knowledge of Japanese is exemplary.

袋井由布子

(Yuko FUKUROI)
Teacher of Japanese language
Institute of Asian Studies,
Chennai

## நன்றியுரை



தமிழ் நாட்டிலிருந்து ஜப்பானுக்கு சென்றவை
பற்றிய கட்டுரைகளை எழுதும்படி ஊக்கம்
அளித்து அவற்றை தன்னுடைய நெருஞ்சி
இலக்கியக் காலாண்டு இதழில் வெளியிட்டு
பின்னர் நெருஞ்சி இலக்கிய இயக்கம் மூலமாக
நூலாக வெளியிட்ட தமிழ் இலக்கியச் செம்மல்
பொறிஞர் கவிஞர் முத்தமிழ் விரும்பி
அவர்களுக்கு நன்றி! நன்றி!! நன்றி!!!.



# *அணிந்துரை*

***கலைமாமணி முனைவர்***
**தே. ஞானசேகரன்**
*பேராசிரியர் மற்றும் தலைவர்*
*தமிழ்த்துறை,*
*பாரதியர்; பல்கலைக்கழகம்,*
*கோயம்புத்தூர்-641 046*

## *உலக மதங்களின் ஒப்பீடு*

*முனைவர் செ. இராஜேஸ்வரி அவர்களின்* ***"தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு பண்பாட்டு நகர்வுகள்"*** *என்ற நூல்* ***"உலக மதங்கள்"*** *குறித்து அறிந்துகொள்ள விரும்பும் அனைவரும் படிக்க வேண்டிய அரிய நூல். இந்நூலில் எட்டுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. ஜப்பானுக்கும் தமிழகத்திற்கும் உள்ள பண்பாட்டுத் தொடர்புகளை அறிவியல் நெறியில் அதே நேரத்தில் ஒரு கதை கூறுவது போன்று எளிய மொழிநடையில் இந்நூலின் செல்நெறி அமைக்கப்பட்டுள்ள விதம் பாராட்டிற்குரியது. இந்நூலில் ஆசிரியர் கண்டு சொல்லியுள்ள சில முக்கியக் கருத்துக்கள் வருமாறு,*

- ஜப்பான் நாட்டில் இன்னமும் அரசர் பதவி இருக்கிறது.
- தொழில் பிரிவினர் அடிப்படையிலான குல முறைகள் உண்டு.
- அரசருக்காக உயிர் கொடுக்கும் சாமுராய் பிரிவினர் வேறு சமூகத்தினருடன் எந்தத் தொடர்புகளும் வைப்பதில்லை.
- ஜப்பான் மொழிதான் உயர்கல்வி மொழி.
- ஜப்பானில் எழுத்தறிவு உள்ளவர்கள் நூறு விழுக்காடு.
- 2017 கணக்குப்படி ஜப்பான் மக்கள் தொகை 12.68 கோடி.
- அரிசியே பிரதான உணவு. மீன் குஞ்சுகளைச் சோற்றுருண்டைகளுக்குள் வைத்து உண்ணும் முறை பிரபலமானது.
- ஜப்பானிய மொழி மேலிருந்து கீழாக எழுதும் முறை கொண்டது. இதனால் இரண்டு கைகளாலும் ஜப்பானிய மொழியை எழுத முடியும்.
- பொங்கல் விழா ஜப்பானிலும் கொண்டாடப்படுகிறது.
- ஜப்பானியர் அதிர்ந்து பேச மாட்டார்கள்.

❖ ஜப்பானியர்கள் மரங்களைத் தெய்வமாக வழிபடுகின்றனர்.

❖ ஜப்பானியர் சுமோ, நிஞ்சா போன்ற தற்காப்புக் கலைகளில் வல்லவர்கள்.

❖ உடலை யோக சாதனமாகப் பயன்படுத்தும் வழிமுறைகளைப் பௌத்த சமயம் இவர்களுக்குக் கற்றுத் தந்துள்ளது.

என்று ஜப்பானின் தனித்தன்மை குறித்துப் பேசும் இந்நூல் தமிழ்நாட்டிலிருந்து ஜப்பான் சென்றவை என்று பல செய்திகளை இந்நூலில் நிறைய பதிவு செய்கின்றது.

**தமிழ்நாடு - ஜப்பான் தொடர்புகள்**

தமிழ்நாட்டிலிருந்து சீனா சென்ற போதிதர்மர் முதலானோர் ஜப்பானிய மொழியை தமிழ் இலக்கணப்படி சீரமைத்தனர் என்று இந்நூல் கூறுகிறது. மேலும் ஜப்பான் பண்பாட்டில் கலந்து நிற்கும் தமிழ்ப் பண்பாடு பற்றிய பல செய்திகள் வருமாறு.

❖ தமிழ்நாட்டில் பாறைகளில் வடிவமைக்கப் பட்டுள்ள புடைப்புச் சிற்பங்கள் போன்று ஜப்பானிலும் புடைப்புச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

❖ ஜப்பானிய மொழியில் இடம்பெற்றுள்ள பகுதி, இடைநிலை, சந்தி, சாரியை, விகுதி,

தேற்றேகாரம், வினா, குறிப்பு போன்றன தமிழிலும் அமைந்துள்ளதை இந்நூல் சான்று காட்டி விளக்கியுள்ளது.

- உம் என்னும் இடைச்சொல், எண்ணும்மை, சுட்டு, வினா என்று தமிழ் இலக்கண மரபுகள் ஜப்பான் மொழியிலும் காணப்படுகின்றன என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது.

- தமிழகத்திலிருந்து ஜப்பான் சென்ற பௌத்தத் துறவிகள் இங்குள்ள பல சமய சமூக நடைமுறைகளையும் எடுத்துச் சென்றனர். அவைகளில் முக்கியமானது நெருப்பும் புகையும் கொண்ட ஓம குண்டம். ஓம குண்டம் வளர்த்துப் பூஜை செய்வது ஜப்பானிலும் உள்ளது.

- தமிழ்நாட்டில் மருதநிலக் கடவுளாக வழிபடப்படும் இந்திரன் வழிபாடு ஜப்பானிலும் இருப்பதை “இந்திரன்-தாய்ஷகோ தென் வழிபாடு” என்ற கட்டுரை விரிவாக ஆராய்கிறது.

- தமிழ்நாட்டில் விநாயகர் வழிபாடு உள்ளதுபோல், ஜப்பானிலும் விநாயகர் வழிபாடு உள்ளதை “யானைக் கடவுளர் - காங்கி தென் வழிபாடு” என்ற கட்டுரை விரித்துப் பேசுகின்றது.

- இந்தியாவில் வழிபடப்படும் காளி தெய்வம் ஜப்பான் நாட்டில் 9ம் நூற்றாண்டுவாக்கில் கடவுளாக்கப்பட்ட வரலாறு இந்நூலின் ஆறாவது கட்டுரையில் இடம்பெற்றுள்ளது.

- தமிழ்நாட்டில் கல்விக்கான தெய்வமான சரஸ்வதி, ஜப்பானிலும் வழிபடப்படுவதை ''சரஸ்வதி - பென்சாயின் தென் வழிபாடு'' என்ற கட்டுரையில் பல சான்றுகளுடன் விளக்கியிருக்கிறது இந்நூல்.

 இந்நூலின் பின்னிணைப்பாக இடம் பெற்றுள்ள ஜப்பானியத் தொன்மக் கதைகள் என்ற பகுதியில் இடம்பெற்றுள்ள **“நிலாவில் ஒரு முயல்குட்டி” “பகலில் சந்திரன் வருவதில்லை ஏன்” “பிசாசுகளைத் துரத்திய பழக்குமரன்”** போன்ற ஜப்பானியத் தொன்மக் கதைகள் தமிழகத்தில் வழக்கிலுள்ள தொன்மக் கதைகளோடு எவ்வாறு ஒப்புமை உடையதாக உள்ளதென்று காட்டப்பட்டுள்ளது. சிறப்பானதாகக் கருதத்தக்கது ஆகும்.

இந்நூல் முழுமையையும் வாசித்து முடிக்கையில் **“சமயம் என்பது மனித சமுதாயத்தின் கண்டுபிடிப்பு”** என்ற கருத்துக்கு வருவதுடன் மதம் முன்னிறுத்துவது சடங்குகளையோ, மதத்தையோ அல்ல; மனிதனையே மதம் முதன்மைப்படுத்துகிறது என்ற கருத்துக்கு ஒரு வாசகன் வந்துவிட முடியும்.

*உலக மதங்கள் முழுமையும் ஓர் எல்லையற்ற ஆற்றலைக் கடவுள் (Supernatural Power) என்று கொண்டு; அவற்றிடம் நன்மை பெறவும், தீமையிலிருந்து தம்மைக் காக்கவும் வேண்டிட பல சடங்குகளைத் தோற்றுவித்திருக்கின்றன. இச்சடங்குகள் அவரவர் நிலம், பண்பாடு சார்ந்து மாறுபடுகின்றன அவ்வளவே. ஆனால் எல்லா மதமும் மனிதனை முன்னிலைப்படுத்தியே செயல்படுகின்றன என்பதே இந்நூல் முன்வைக்கும் கருத்து. ஜப்பானை அறிந்து கொள்ள விரும்பும் யாரும் இந்நூலைப் படிக்கலாம். இதுபோன்ற பல நூலை எழுதிடுமாறு முனைவர் செ. ராஜேஸ்வரி அவர்களை வேண்டி விரும்பிக் கேட்டுக் கொள்கின்றேன்.*

*வாழ்த்துக்களுடன்*

***(தே. ஞானசேகரன்)***



## நூலாசிரியர் பற்றி



முனைவர்.செ. இராஜேஸ்வரி மொழி பெயர்ப்பியல் துறையில் முனைவர் பட்டம் பெற்றவர். **புலமை, செந்தமிழ், வளர் தமிழ், ஓங்கு தமிழ் நா.வா.வின் ஆராய்ச்சி** போன்ற ஆய்விதழ்களில் ஆய்வுக் கட்டுரைகள் வெளியிட்டார். **மொழி பெயர்ப்பியல் ஆய்வு** என்ற ஆய்வு கட்டுரைகள் அடங்கிய நூல் ஒன்றை 1992இல் வெளியிட்டார். இந்நூல் இணையத் தமிழ் பல்கலைகழகத்தின் மின் நூல் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது.

1988 முதல் தமிழ் ஆங்கில மொழிபெயர்ப்புப் பணிகளில் ஈடுபட்டுள்ளார். *Indian Women–Changes and Challenges, Urban Theology, Vaigai Paripatal, Assisted reproductive technologies and its Impact on Women, Eco Vision and Mission, Bachelor's Study Materials for Social Science [IGNOU], Neuro Ophthalmology Articles* போன்ற பல துறை சார்ந்த பனுவல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். 1993இல் ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் இணைப் பதிப்பாசிரியராகப் *[Associate editor]* பணியாற்றினார். அப்போது ஜப்பானிய மொழியைத் தமிழில் கற்பது எளிது என்பதை

*அறிந்து அதற்கான நூல் உருவாக்கும் பணியில் ஜப்பானியப் பெண் யூகோ ஃபுகுரோயியுடன் இணைந்து செயல்பட்டார். அந்த நூல் மூன்று பாகங்களாக வெளி வந்துள்ளது. ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தில் வெளிநாட்டு மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். தமிழ் மாணவர்களுக்கு ஜப்பானிய மொழி இலக்கணம் கற்பித்தார். யுக்கோ சான் அம்மாணவர்களுக்கு ஒலிப்பயிற்சி அளித்தார்.*

*1986 முதல் சமயச் சொல் அகராதி, எபிரேயம் - தமிழ் அகராதி; கிரேக்கம் - தமிழ் அகராதி உருவாக்கத்திற்காக மக்கள் கல்வி அறக்கட்டளையின் இயக்குனர் மறை திரு.இராபின்சன் லேவி ஐயா அவர்களுடன் இணைந்து இருபது ஆண்டுகள் தீவிரமாகப் பணியாற்றினார். ஈரோடு மகளிர் கலை, அறிவியல் கல்லூரி, திருச்சி ஸ்ரீமத் ஆண்டவன் கலை, அறிவியல் கல்லூரி, மதுரை அமெரிக்கன் கல்லூரி போன்றவற்றில் சில ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினார்.*

*2000இல் மதுரையில் அமெரிக்காவின் விஸ்கான்சின் பல்கலைக்கழக மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார். அப்போது வெளி நாட்டவருக்கு தமிழ் கற்பிக்கப் பாட நூல் ஒன்றை உருவாக்கினார். அரவிந்த் கண் மருத்துவமனையில் மொழி*

பெயர்ப்பாளராகவும் வேற்று மாநிலம் மற்றும் வெளிநாட்டு மருத்துவர்களுக்கு, தமிழ் ஆசிரியராகவும் பணியாற்றினார். அப்போது தமிழ் தெரியாத கண் மருத்துவர்களுக்குத் தமிழ் கற்பிக்க *Tamil for Non-Tamils* என்ற பாட நூலை உருவாக்கினார். இன்றும் அந்தப் பாட நூல் அங்குப் பயன்பாட்டில் உள்ளது. அது போல அங்குச் செவிலியர் பயிற்சி பெறும் இளம் பெண்களுக்கு ஆங்கிலம் கற்பிக்க *Easy English* என்ற ஆங்கிலப் பாட நூலை உருவாக்கினார். மக்கள் கண்காணிப்பகத்தில் வெளி மாநிலத்தவருக்கு ஆங்கிலமும் வெளி நாட்டவருக்குத் தமிழும் கற்பித்தார்.

தமிழ் கற்கும் வெளிநாட்டு மாணவர்களுக்காக சென்ட்டர் ஃபார் லேங்குவேஜ் ஸ்டடீஸ் *[Centre for Language Studies]* என்ற பெயரில் தனி மையம் ஒன்றை அமைத்து அவர்களுக்குத் தமிழ் கற்பித்தார்.

எம்.ஜி.ஆர். பற்றி **“ஒப்பனையும் ஒரிஜினலும் எம்.ஜி.ஆர். 100”** என்ற தலைப்பில் விகடன்.காமில் (காம் இணைய தளத்தில்) முப்பது கட்டுரைகள் வெளியிட்டார். அதன் தொடர்ச்சியாகக் கனடாவில் இருந்து வரும் *www.tamilauthors.com* என்ற இணைய இதழில் தொடர்ந்து கட்டுரைகள் எழுதினார். எம்.ஜி.ஆரின் ரசிகர் மன்றங்களின்

*தனித்தன்மை குறித்து ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுதிவருகிறார். எம்.ஜி.ஆர். பற்றி நூறு நூல்கள் எழுத வேண்டும் என்பது இவர் இலட்சியம். அதில் தற்போது* **வெற்றித் திருமகன்** *என்ற பெயரில் தொடங்கும் வரிசையில் 18 நூல்கள் வெளிவந்துள்ளன.*

*தஞ்சையைச் சேர்ந்த தமிழ் இலக்கியச் செம்மல் கவிஞர் முத்தமிழ் விரும்பி அவர்களின் பூ மர நிழல், வறட்சியின் பாடல்கள், உன்னொடு உரையாடுதல் காதலின் மொழி மற்றும் திட்டிவாசல் பெண்ணொருத்தி என்ற கவிதை நூல்களை இவர் முறையே* ***"Shade of the Flowering Tree, Songs of Dryness, Speaking with You, Language of Love, The Flower Moon (A Lady at the little gate) and Honey Hive, Ambrosial Kiss (Editor)",*** *என்று ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இந் நூல்களைச் சென்னை எமரால்டு பதிப்பகம் வெளியிட்டுள்ளது.*

*தமிழிலக்கியச் செம்மல் கவிஞர் பொறிஞர் முத்தமிழ் விரும்பி அவர்களின் பூ மர நிழல் மற்றும் திட்டி வாசல் பெண்ணொருத்தியின் தொகுப்புகளில் உள்ளடக்கப் பகுப்பாய்வு மேற்கொண்டு அவற்றைப்* **பூ மர நிழலில் களமும் காலமும்** *மற்றும் கவிஞர் பொறிஞர் முத்தமிழ் விரும்பியின்* **பாடுபொருளும் பாசப்பொருளும்**

***[திட்டிவாசல் பெண்ணொருத்தி மட்டும்], என்ற நூல்களையும் '2020 தை மாதத்தில் இன்று' கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு, முத்தமிழ் விரும்பியின் கவிதை காதல், கவிதை முகங்கள் (தொகுப்பாசிரியர்)*** *என்ற நூலையும் வெளியிட்டார்.*

*பண்பாட்டு ஆய்வு நூல் வரிசை என்ற தலைப்பில் இந்நூலான* ***பண்பாட்டு நகர்வுகள் [தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு], தேவேந்திரன், பெண் தெய்வ வழிபாடு,*** *ஆகிய நூல்களை எழுதி வெளியிட்டார்.* ***காணாமல் போன கடவுளர்*** *என்ற தலைப்பில் ஒரு நூல் எழுதி வருகிறார்.*

***சென்னை பெருநகராட்சியின் முன்னாள் மேயர் மனித நேயச் செம்மல் சைதை சா. துரைசாமி அவர்களின் சிறப்புத் திட்டங்களும் செயல்பாடுகளும்*** *என்ற பெயரில் ஒரு நூல் எழுதி வெளியிட்டுள்ளார். இவர் எழுதிய சிறுகதைகள்* ***'அமராவதியின் காதல்'*** *என்ற பெயரில் தொகுக்கப்பட்டு அமேசானில் வெளிவந்துள்ளது. இவர் தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்குச் சென்றவை பற்றி எழுதி வரும் ஆய்வுக் கட்டுரைகள் நெருஞ்சி என்னும் இலக்கிய இதழில் வெளிவருகின்றன. தினகரன் ஜோதிட மலரில் இவர் எழுதிய* ***"என்னோட ராசி நல்ல ராசி"*** *என்ற தொடர் வந்து*

*கொண்டிருக்கின்றது. மாதமிரு முறை வரும் ஆன்மீகம் இதழில்* **‘மர வழிபாட்டின் வேர்களைத் தேடி** ***(Deep into the roots of Tree worship),*** **காளியும் தேவியும், உலகளாவிய காளி கோட்பாடு’** *போன்ற ஆன்மீகக் கட்டுரைகள் வெளிவருகின்றன.*



## ***முன்னுரை:***

***"தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு பண்பாட்டு நகர்வுகள்"*** *என்ற இந்நூல் மிகுந்த கவனத்தோடும் பொறுப்போடும் எழுதப்பட்டது. 25 வருடங்களுக்கும் மேலாக இந்து கடவுளர்கள் பற்றிய நிறைய நூல்களைப் படித்து அவற்றிலிருந்து குறிப்புகளை எடுத்து சேகரித்து ஆராய்ந்த பிறகு எழுதப்பட்டிருக்கிறது. பௌத்தம் சமணம் மதங்கள் ஏற்படுத்தியிருக்கும் தாக்கம் இன்று வரை நமது அன்றாட வாழ்வில் உறுதியாக உணரப்படுகிறது. 1987 முதல் 92 வரை சமயச் சொல் அகராதி உருவாக்கும் குழுவில் இடம்பெற்றிருந்ததால் உலக சமயங்கள் பற்றிய கலைச்சொற்களைத் திரட்டும் பணியில் அவற்றைக் குறித்த விளக்கங்களை அறிந்து கொள்ளும் அரிய வாய்ப்பு கிடைத்தது. இதன் விளைவாக சமயம் என்பது மனித சமுதாயத்தின் கண்டுபிடிப்பு என்பதை அறிய முடிந்தது. மனித சமுதாயம் தத்தம் சமூகப் பண்பாட்டு நிலவியல் சூழ்நிலைகளுக்கு ஏற்ப சமய விதிமுறைகளை உருவாக்கியது. அவை தோன்றுவதற்கான காரணங்கள் தெரியாமலேயே பிற்காலத்தில் இச்சமய நடைமுறைகள் பின்பற்றப்படுவது உண்டு. இவ்வாறு கூறுவதால் தெய்வ நம்பிக்கை இல்லை என்பது பொருளல்ல. தெய்வ நம்பிக்கை என்பது வேறு,*

சமய நடைமுறைகளை பின்பற்றுவது என்பது வேறு. ஒரு சமயம் என்பது வெறித்தனமாக பின்பற்றப்படும் போது மதம் கொண்டதாகிறது. மனிதர்களின் நன்மைக்காக ஏற்படுத்தப்பட்டது என்பதை புரிந்து கொள்ளும்போது சமயம் நமது வாழ்க்கைக்கு வழிகாட்டும். தனிமனிதன், குடும்பம், சமுதாயம், நாடு என ஒவ்வொன்றுக்கும் சில நெறிமுறைகள் கொள்கைகள் பழக்கங்கள் இருப்பதைப்போல சமயம் என்பதற்கும் தனித்தனியான கொள்கை கோட்பாடு சடங்கு சம்பிரதாயங்கள் உண்டு. ஒவ்வொரு சமயமும் தன்னளவில் தனித்தன்மை கொண்டதாகும். ஆதி காலத்து மந்திரச் சமயம் அதிலிருந்து வளர்ந்த நாட்டுப்புறச் சமயம் இவற்றிலிருந்து தோன்றிய நிறுவனப்படுத்தப்பட்ட சமயம் என சமயம் அடுத்தடுத்த நிலைகளை கடந்து வந்துள்ளது. இம்மூன்று வகைச் சமய நடைமுறைகளும் உலகின் வெவ்வேறு பகுதிகளில், வெவ்வேறு அளவுகளில் பின்பற்றப்பட்டு வருவதைக் காணலாம். இந்தப் புரிதலோடு சமயங்களை அணுகும் போது மனிதர்களுக்கே அதிக முக்கியத்துவம் இருப்பதை உணரலாம். இந்நூல் எழுதுவதற்குப் பல ஆண்டுகாலமாக என்னுள் ஆய்வுச்சிந்தனையை உருவாக்கிய சில

நூல்களை மட்டும் இங்கு குறிப்பிடுவது அவசியமாகிறது.


1. *O A. Wall, Eroticism in Religions of the World, Mayur Publication, Delhi. 1986.*
2. *Ajith Mukherjee, Ritual art of India, Thames and Hudson London. 1985 .*
3. *Anthropology Volume 1 E.B. Tyler K. T. Watts & Co., London, 1930*
4. *Indian erotica in the oldest period*
5. *Wendy Doniger O' Flaherty, Shiva the erotic ascetic, Oxford University Press.*
6. *Radhakamal Mukerjee, Culture and Art of India, Munshiram Manoharlal Publication private limited, New Delhi 5, 1984.*

7 *B.S. Guha, The mythological origin of the Abor dormitory system,NEFA, Shillong.*

8 *Anthropology on the March edited by Bala Ratnam SSA Publication, Madras 2.*

9 *E.O. James, A Study in pre historical archaeology, Thames and Hudson, London, 1957.*

10. *Man and his symbols, conceived and edited by Carl Yung, Picador publication, London, 1964.*

11. *JosephL. Henderson, Ancient myths and Modern man*

12. *Surendran Kumar Mohanraj, Buddhism in Orissa*

13. *சிலப்பதிகாரம், மணிமேகலை*

14. *மயிலை. சீனி வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும்*

15. *சமணத் தமிழ் இலக்கிய வரலாறு, தெ. பொ. மீ.*

16. *ம.தங்கராஜ், பதிப்பாசிரியர், தேவேந்திரர் திருவிழா என்னும் இந்திர விழா (1&2) 2014.*

17. *முனைவர். தே. ஞானசேகரன், இந்திர விழா என்னும் நாற்று நடவுத் திருவிழா, 2000.*

18. *முனைவர்.தே.ஞானசேகரன், மந்திரம் சடங்குகள், சமயம் (இறைமறை பொருட்கூறுகள் பற்றிய ஆராய்ச்சி நூல்), பார்த்திபன் அச்சகம், திருச்சி, 2000 (முதல் பதிப்பு).*



## உள்ளடக்கம்





## ***சாம்பலில் இருந்து வந்த ஃபீனிக்ஸ் பறவை – ஜப்பான்***

*சாம்பலில் இருந்து உயிர்பெற்ற ஃபீனிக்ஸ் பறவை போல சாம்பலில் இருந்து புத்துயிர் பெற்று எழுந்த நாடு ஜப்பான். இரண்டாம் உலகப்போரின் போது ஹிரோஷிமா மற்றும் நாகசாகி ஆகிய ஊர்களின் மீது அமெரிக்கா குண்டு வீசியதால் அங்கு வாழ்ந்த மக்கள் கருகிச் செத்தனர். கருவில் இருந்த குழந்தைகள் உடல் ஊனத்துடன் பிறந்தன. பிழைத்தவர்கள் சாம்பலாகக் கிடந்த விளை நிலங்களை கடுமையாக உழைத்துப் பண்படுத்தினர். தங்களின் தாய்மொழி, பண்பாடு ஆகியவற்றைப் போற்றி மதித்து மீண்டும் புத்துயிர் பெற்றனர். இன்று இந்நாடு உலகளவில் அமெரிக்கா மற்றும் சீனாவுக்கு அடுத்தபடியாக பொருளாதார நிலையில் உயர்ந்துள்ளது.*

*கிறிஸ்துவின் பிறப்புக்கு முப்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே ஜப்பான் நாடு நாகரீகத்திலும், பண்பாட்டிலும் சிறந்து விளங்கி வருகிறது. இந்நாடு ஹோான்ஷு, க்யூஷு, ஷாகேகு மற்றும் ஹொக்கைதொ என்ற*

நான்கு தீவுகளின் கூட்டாக அமைந்தது. இவர்களுக்கு இப்போதும் அரசர் உண்டு. ஜப்பானிய அரச பரம்பரை உலகிலேயே மிகப் பழைய மிக நீண்ட பரம்பரை ஆகும்.

ஜப்பானின் மக்கள் சமூகத்தில் தொழில் சார்ந்த (ஜாதி) பிரிவினைகள் உண்டு. அரசருக்காக உயிரையும் கொடுக்கத் தயாராக உள்ளவர்கள் "சமூராயி" எனப்படும் போர் மறவ குலத்தவர் ஆவர். இவர்கள் தமக்குக் கீழாக உள்ள சமூகப் பிரிவினருடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்வதில்லை. சில ஊர்களில் குறிப்பிட்ட சமூகத்தினர் மட்டும் வசிக்கின்றனர். எனவே இவர்கள் வீட்டிலும், அலுவலகத்திலும் வெளி இடங்களிலும் மரியாதைப் படிநிலையைத் தீவிரமாகப் பின்பற்றுகின்றனர்.

ஜப்பானிய மொழியை மட்டுமே கற்றுத் தெளியும் அந்நாட்டவர் அந்த மொழியிலேயே கணினி, அறிவியல், மருத்துவம், தொழில் நுட்பம் ஆகியவற்றைக் கற்கின்றனர். தாய்மொழிக் கல்வி மூலமாகவே அங்கு 18 பேர் நோபல் பரிசு பெற்றுள்ளனர். தற்போது சில வருடங்களாக மட்டும் அந்நாட்டில் ஆங்கில மொழி கற்பிக்கப்படுகிறது. ஜப்பானில் எழுத்தறிவு உடையவரின் எண்ணிக்கை நூறு சதவீதம் ஆகும்.

ஜப்பான் தொழில்நுட்பத்தில் மிக உயர்ந்த இடத்தைப் பெற்றுள்ளது. சிறுவர்களுக்கு "அனிமேஷன்" மூலமாகப் பாடம் கற்பிக்கின்றனர் வீடுகளிலும், கடைகளிலும், தெருவிலும் "எந்திரன்"களைக் காணமுடியும். "புல்லட் ரயில்" விடுவதில் இந்நாடு முதலிடத்தில் உள்ளது. இன்று இந்தியாவும் புல்லட் ரயில்விட ஜப்பானின் உதவியையே நாடியது.

ஜப்பானியர் "உணவே மருந்து" முறைப்படி தமது வாழ்க்கையை அமைத்திருப்பதால் அவர்கள் அதிக வருடங்கள் உயிரோடு இருக்கின்றனர். இந்நாட்டின் மக்கள் தொகை மொத்தம் 13 கோடியாகும். இதில் ஏறத்தாழ கால்வாசிப் பேர் 65 வயதைக் கடந்த மூத்த குடிமக்கள் ஆவர். அவர்கள் அந்நாட்டில் ஆரோக்கியமாக வசிக்கின்றனர். ஜப்பானில் அரிசியே பிரதான



உணவு. மீன் குஞ்சுகளை சோற்றுருண்டைக்குள் பொதிந்து உண்ணும் ஒரு வகை உணவு "சுஷி" எனப்படும். அது ஜப்பானின் பிரபல உணவு வகைகளில் ஒன்றாகும். குதிரை இறைச்சியைப் பச்சையாகத் திண்ணும் பழக்கமும் இவர்களிடம் உண்டு. அரிசியில் "சாகே" (Sake) என்ற மதுவை (சுண்டக் கஞ்சி போல) அவரவர் வீட்டிலேயே தயாரித்துக் கொள்வர்.

ஜப்பான் மொழி தமிழைப் போல பகுதி விகுதி, இடைநிலை, சந்தி என ஒட்டுக்கள் இணைந்து வரும் மொழியாகும். தமிழுக்கும் ஜப்பானிய மொழிக்கும் இருக்கும் நெருங்கிய தொடர்பை சுசுமோ, ஒநோ போன்ற பல அறிஞர்கள் ஆராய்ந்து ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியுள்ளனர்.

சென்னையில் செம்மஞ்சேரியில் உள்ள ஆசியவியல் ஆய்வியல் நிறுவனம் தமிழ் மூலமாக ஜப்பான் மொழி கற்பதற்கான நூல்களை வெளியிட்டுள்ளது. ஆங்கிலம் மூலமாக படிப்பதை விட தமிழ் மூலமாக ஜப்பானிய மொழியை படிப்பது எளிது.

ஜப்பானியர் தமது மொழியை ரோமன் எழுத்துக்களிலும் (நாம் ஆங்கில மொழிக்குப் பயன்படுத்தும் a, b, c எழுத்துக்கள்) எழுதிப் படிப்பதுண்டு. இந்த எழுத்தை ரோமாஜி

*(Romaji)* என்பர். இது தவிர பிற மொழி எழுத்துக்களைப் பிரித்துக் காட்ட வேண்டி "கதகானா" *(Katagana)* என்ற எழுத்தில் எழுதுவர். ஜப்பானிய மொழிச் சொற்கள் பெரும்பாலும் இடைச் சொற்களாக *(Preposition, Suffix)* மட்டும் பயன்படுவதால் அவற்றை "ஹிராகானா"வில் *(Hira gana)* எழுதுவர். பெயர்ச்சொல் மற்றும் வினைச்சொற்களை *(Noun & Verbs)* சீன மொழிச் சொற்களாக "காஞ்சி" *(Kanji)* எழுத்துகளில் எழுதுவார்கள். அவை சித்திர எழுத்துகளாக அமையும். ஜப்பானிய மொழியில் "ட" என்ற ஒலி கிடையாது. அதன் தலைநகரை "தோக்கியோ' என்றுதான் அழைக்க வேண்டும்

ஜப்பானியர் தம் மொழியை மேலிருந்து கீழாக எழுதுவர். இரண்டு கைகளாலும்

## Hiragana Chart

| • | w | r | y | m | h | n | t | s | k | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ん n/m | わ wa | ら ra | や ya | ま ma | は ha | な na | た ta | さ sa | か ka | あ a | a |
| | | り ri | | み mi | ひ hi | に ni | ち chi | し shi | き ki | い i | i |
| | | る ru | ゆ yu | む mu | ふ fu | ぬ nu | つ tsu | す su | く ku | う u | u |
| | | れ re | | め me | へ he | ね ne | て te | せ se | け ke | え e | e |
| | を o | ろ ro | よ yo | も mo | ほ ho | の no | と to | そ so | こ ko | お o | o |

*அவர்களால் எழுத முடியும். ஜப்பானியரும் பொங்கல் விழா கொண்டாடுவர். நாம் "பொங்கலோ பொங்கல்" என்று ஆர்ப்பரிப்பது போல அவர்கள் "ஹொங்கரோ ஹொங்கர்" என்பர். நமது "நவராத்திரி" போல கொலுப் படிகள் செய்து சிறுமிகளுக்காக அவர்களும் பொம்மைகளைப் படிக்கட்டில் அடுக்கி வைத்துக் கொண்டாடுவர்.*

*கியோதோ நகரில் 1,600 கோவில்கள் உண்டு. இந்நகரத்தை ஜப்பானின் இரண்டாம் தலைநகர் என்பர். நமது விநாயகர், சரஸ்வதி போன்ற தெய்வங்களை ஜப்பானியர் வேறு பெயர்களில் வணங்குகின்றனர். அவை பௌத்த மதத் தெய்வங்களாக அங்கு வணங்கப்படுகின்றன.*

*ஜப்பானியர் சித்ரா பௌர்ணமியையும் வைகாசி பௌர்ணமியையும் புத்தர் நினைவாகக் கொண்டாடுகின்றனர். அவர்கள் தம் வீட்டு ஜன்னல் வழியாக சந்திரனைக் (மூன் வாட்சிங்) காண்பர். சந்திரன் ஜன்னலின் கீழ் விளிம்பில் தோன்றி பின் மேலெழுந்து சென்று மேல் விளிம்பில் மறைவது வரை அமைதியாகப் பார்த்துக் கொண்டே இருப்பர். இது ஒரு யோகப் பயிற்சியாகும்.*

ஜப்பானின் தலைநகரான தோக்கியோவில் ஒரு கோடி மக்கள் வாழ்கின்றனர். உலகில் அதிக மக்கள் தொகை உள்ள நகரங்களில் தோக்கியோ முதலிடத்தில் உள்ளது. இங்கு வசிக்கும் வெளிநாட்டவர் இரண்டு சதவீதம் மட்டுமே ஆகும்.

ஜப்பானியர் பேசுவதற்கும், நிற்பதற்கும், உட்காருவதற்கும், சாப்பிடுவதற்கும் என தனித்தனி விதிமுறைகளைப் பின்பற்றுவர். பெரியவர்களுக்கு (ஒரு வயது மூத்தவராக இருந்தாலும்) அதிகளவில் மரியாதை தருவர். ஜப்பானில் சுனாமி தாக்கிய பிறகு மக்கள் வரிசையில் பொறுமையாக நின்று தமக்குரிய பொருட்களை வாங்கிச் சென்றதை நாம் பார்த்திருக்கிறோம். அங்கு மக்கள் எந்தச் சூழ்நிலையிலும் அமைதியாகவும், சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டும் நடப்பதால் அங்கு மன அழுத்தம் குறைவு. அதனால் கொலையும், தற்கொலைகளும் குறைவு. இயற்கை மரணங்களே அதிகம்.

தற்போது ஜப்பானிய இளைஞர்கள் அமெரிக்க மோகத்தில் மயங்கி இருப்பதால் திருமணத்தை வெறுக்கின்றனர். இதனால் அவர்களிடம் குழந்தைப் பேறு குறைந்து வருகிறது. மூத்த குடிமக்களின் எண்ணிக்கையே அதிகம் உள்ளது. ஜப்பானியர் அதிர்ந்து

பேசமாட்டார்கள். ஆனால் சுமோ, நிஞ்சா போன்ற தற்காப்புக் கலைகளில் வல்லவர்கள். இவர்களின் பௌத்த சமயம் உடலை யோக சாதனமாக பயன்படுத்தும் வழிமுறைகளை கற்றுத் தந்துள்ளது.

ஜப்பானிலும் சீனாவிலும் மரங்களை மக்கள் தெய்வாம்சம் பொருந்தியனவாகக் கருதுகின்றனர். ஜப்பானில் "கொ தாமா" என்ற சொல்லால் மரக்கடவுளைக் குறிப்பிடுகின்றனர். அதன் (கொ தாமாரின்) சாபத்துக்கு ஆளாகக் கூடாது என அஞ்சுகின்றனர். ஜப்பானில் மரங்களை வெட்டுவதற்கு அவற்றிடம் மன்னிப்புக் கேட்கும் விதமாக ஆண்டுதோறும் 'கொதாமா சானு'க்கு சிறப்பு வழிபாடும் பண்டிகையும் நடத்துகின்றனர். [கொ தாமா சான் = மரக்கடவுள் அவர்கள்] சான் என்றால் தமிழில் அவர்கள் போன்ற ஒரு மரியாதைச் சொல் ஆகும். ச்சான் என்றால் சிறுவர்களுக்கான மரியாதைப் பின்னோட்டு ஆகும்).

1945 ஆம் ஆண்டு ஆகஸ்டு 6ம் நாள் ஹிரோஷிமாவில் குண்டு வீசப்பட்டபோது அனைத்து மரம், செடி, கொடிகளும் கருகிப்போயின். விளைநிலங்கள் தரிசாகி விட்டன. தாவரவியல் அறிஞர்கள் Gink go phyta என்ற மரம் உலகில் அழிந்து விட்டதாக முடிவு

செய்தனர். அப்போது அங்கு வாழ்ந்த சீனத் துறவிகள் தமது மடத்தில் அந்த மரத்தைப் பாதுகாத்து வளர்த்து வருவது தெரிய வந்தது (இது போலத்தான் தமிழ்நாட்டிலும் அறிய மரங்கள் ஸ்தலவிருட்சங்கள் என்ற பெயரில் கோவில்களால் பாதுகாக்கப்படுகின்றன).



*Gink go phyta tree*

*ஜப்பானில் Ging Ko மரத்தை "பாலூட்டும் தாய்மாருக்கு உதவும் மரம்" என்று அழைப்பர். இந்த கிங்க் கோ மரம் மட்டும் அமெரிக்க குண்டுவீச்சின் நச்சுக்காற்றிலும் தாக்குப் பிடித்ததால் இதனை "Living fossil", "The survivor", "The bearer of hope" என்று இம்மக்கள் அழைக்கின்றனர். இந்த மரம் அணுகுண்டில் இருந்து வெளியேறிய நஞ்சினையும் எதிர்த்து நிற்கும் வீரியம் படைத்ததாக உள்ளது.*

*எரிமலை பூமியான ஜப்பானில் ஒரு வருடத்தில் சிறியதும் பெரியதுமான பூமி அதிர்ச்சி சுமார் 1500 முறை ஏற்படுகின்றது. 200 முறை எரிமலைகள் குமுறுகின்றன.*

*குண்டு வீசப்பட்டதற்குப் பிறகு ஜப்பானியர் தம் விழாக்களைக் குறிப்பிட்ட ஆங்கிலத் தேதிகளில் வரையறுத்துக் கொண்டனர். இந்நாடு தோன்றிய நாளை பிப்ரவரி 11 அன்று கொண்டாடுகின்றனர். ஷிந்தோயிசம் மற்றும் பௌத்த சமயத்தை பெரியவர்கள் பின்பற்றுகின்றனர். இளைஞர்களிடம் பெரிய அளவில் மத சம்பிரதாயங்கள், மத நம்பிக்கைகள் காணப்படவில்லை. அறிவியல், தொழில்நுட்ப பொருளாதார வளர்ச்சியில் படுவேகத்தில் ஜப்பான் பயணிக்கிறது.*



# 1. தமிழ்நாட்டில் இருந்து ஜப்பான் சென்றவை

கி.மு. ஆறாம் நூற்றாண்டில் கலிங்க நாட்டிலிருந்து பௌத்தமதம் தெற்கு நோக்கி பரவத் தொடங்கியது. அந்நாட்டில் கி.மு. ஆறாம் நூற்றாண்டுக்கு முன்பு பத்து நூற்றாண்டுகள் வரை அதாவது கி.மு. பதினாறாம் நூற்றாண்டு வரை பௌத்த மதம் செழித்து காணப்பட்டது. கி.மு. 261 ஆம் ஆண்டில் கலிங்கப்போர் நடைபெற்றது. அதன் பிறகு பௌத்த மதத்திற்கு மாறிய அசோகர் தன்னுடைய பிள்ளைகளைத் தெற்கே அனுப்பி பௌத்த மதத்தை எங்கும் பரப்பும்படி செய்தார். இதுவே இந்திய வரலாற்றில் முதன்முதலாக நடந்த மத மாற்றமாகும்.

பௌத்த மதம் ஆரம்பத்தில் மகாயான பௌத்தம், ஹீனயான பௌத்தம் என்று இரண்டு பிரிவாகப் பின்பற்றப்பட்டது. புத்தரைக் கடவுளாகக் கருதித் தாமும் புத்தர் ஆகவேண்டும் என்பதே வாழ்வின் பயன் என நம்பியவர்கள் மகாயானம் என்ற பெருவழியைப் பின்பற்றினர். புத்தரை ஒரு

சராசரி மனிதனாகக் கருதி அவரை சாக்கியமுனி என்று அழைத்து தியானத்தின் சின்னமாக ஏற்றுக் கொண்டவர்கள் ஹீனயானா என்ற சிறு வழியைப் பின்பற்றுகிறவர்கள் ஆயினர்.

மகாயானா என்ற பெரு நெறியைச் சேர்ந்தவர்தான் தமிழகத்தில் அகத்தியர் எனக் கருதப்படும் அவலோகிதேஸ்வரர் ஆவார். இவர் ஒரு போதிசத்வராகப் பொதிகை மலையில் இருந்து பௌத்தப் பாரம்பரியத்தை மருத்துவம், ஜோதிடம் ஆகிய துறைகளில் பரப்பியவர் என்பது ஆய்வுகளின் மூலம் அறிந்த உண்மையாகும். ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தின் நிறுவனர் முனைவர் ஜான் சாமுவேல் இது பற்றி நூல் வெளியிட்டுள்ளார்.



சபரிமலை

கேரளா மாநிலத்தில் ஐயப்பனாக வீற்றிருக்கும் சாஸ்தாவின் உறைவிடமான சபரிமலை பொதியமலை என்றுதான் அழைக்கப்பட்டது. அங்கும் அகத்தியர் வாழ்ந்ததாக பழைய பாரம்பரியங்கள் எடுத்துரைக்கின்றன. சபரி மலை சாஸ்தாவும் பௌத்த மதம் சார்ந்தவரே ஆவார். பௌத்தம் வெளியேறிய பிறகு சைவ, வைணவ மதங்கள் இங்கிருந்த பௌத்தக் கடவுளரை தம்முடையவையாக சுவீகரித்துக் கொண்டன.

சபரிமலையின் ஐயப்பன் ஆரம்பத்தில் சாக்கியமுனி என்றே அழைக்கப்பட்டார். பாலி மொழியில் புத்தரை **சாக்கிய முனி** என்று அழைத்தனர். கவுதம புத்தர் பாலி மொழியில்தான் சமயக் கருத்துக்களை பரப்பினார். பின்னர் அதே பாலி மொழியில் புத்த மதம் பரப்பப்பட்டதாலும் வேறு மொழி பேசும் இடங்களில் புத்தத் துறவிகள் அங்குப் புழங்கும் மொழியைப் படித்து அந்த மொழியிலேயே, தமது சமயக் கருத்துக்களைப் பரப்பினர். பாலி மொழி புத்த சமய மொழி ஆயிற்று. இன்றும் இம்மொழிச் சொற்கள் கிழக்காசிய நாடுகளில் அதிகளவில் புழங்குகின்றன. அவற்றை சமஸ்கிருதம் என்று பலர் சொல்லி வருகின்றனர்.




பாலி என்பது சாதாரண மக்கள் பேசி வந்த மொழி ஆகும். பௌத்தம் சாமான்யர்களின் மதமாக இருந்து வந்தது. இந்த எளிய சாமான்யர்களின் மொழியே மத மாற்றத்துக்கு உகந்ததாக இருந்தது. பின்னர் கிறிஸ்தவமும் தமிழகத்தில் பைபிள் மொழிபெயர்ப்பில் ஈடுபட்ட போது உரைநடை என்ற புதிய

மொழி நடையை மக்களுக்கு அறிமுகம் செய்தது. இவ் எளிய மொழி நடை விரைவான மத மாற்றத்துக்கு உதவியது. இதற்கு முதலில் அடிக்கல் நாட்டியது பௌத்த சமயமே எனலாம்.

இந்தியாவில் பௌத்த சமயம் கி.பி. ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகளில் பிராமண ஆதிக்கத்தை எதிர்க்க இயலாமல் மெல்ல மெல்ல மறைந்தது. கலிங்க நாட்டிலும், வங்காள நாட்டிலும் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் சகஜயானா என்ற பெயரில் தாந்த்ரீக பௌத்தம் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தது. தாந்த்ரீகம் என்பது பெண்மை ஆற்றலும் அதனுடன் இணைந்த கருவளமும் சார்ந்ததாக இருந்தது. இது வங்காளத்தில் நாட்டுப்புற மரபில் இருந்து வந்த பெண்மை



துர்கா பூஜை

வழிபாட்டுடன் இரண்டறக் கலந்துவிட்டது. இதனை சகஜ பாவம் என்றழைத்த சகஜயானா பௌத்தர்கள் பெண் தெய்வ வழிபாட்டில் தீவிரம் காட்டினர். இன்று இது கல்கத்தா காளி வழிபாடாகவும், துர்கா பூஜையாகவும் செல்வாக்குப் பெற்றுள்ளது.

கலிங்க நாட்டில் உத்தியானா என்ற இடத்தில்தான் இந்த வஜ்ராயனா பிரிவு உதயமாயிற்று. இன்று வஜ்ராயனா பௌத்தத்துக்குரிய நான்கு பீடங்களில் உத்தியானாவும் ஒன்றாகும். சகஜயான பௌத்தர்கள் தம்முடைய உடலையே தமது வழிபடு பொருளாகக் கருதினர். மனித உடலின் பல்வேறு பாகங்களில் பல்வேறு கடவுளர் உறைந்திருப்பதாகவும் நம்பினர். காமதேனு வழிபாட்டில் பசுவின் உடலில் பல்வேறு கடவுளர்கள் உறைந்துள்ளனர் என்ற கருத்தாக்கம் இத்துடன் ஒப்பு நோக்கத்தக்கது.

தென் தமிழகத்தில் சகஜயானா பாவம் விரைவாகப் பரவியதால் இம்மார்க்கத்தைப் பின்பற்றியவர்கள் காமதேனுவில் இருந்த தேனு, தேனுகா, தேனம்மா, தேன்மதி என்று பெயர் சூட்டிக்கொண்டனர். இப்பகுதியில் போரில் இறந்து போகாத ஆண், தீயில் வெந்து போகாத பெண் எனப் பல நாட்டுப்புறத் தெய்வங்கள் உண்டு. அவை சகஜமார்க்கத்தின்




அடிப்படையில் தோன்றியவை சகஜயானத்தில் உடலே யோக சாதனமாகக் கருதப்பட்டதால் அதுவே மோட்ச சாதனமும் ஆயிற்று. உடலை எண்ணெய்த் துணியால் சுற்றி தீ வைத்து எரித்து மோட்சத்துக்குப் போகும் முறையும் பின்பற்றப்பட்டது. பாலியல் மூலமாக உடம்பை யோக சாதனமாக மாற்றும் முறையும் பின்பற்றப்பட்டது.

சகஜ பாவத்தில் யோகி மற்றும் யோகினிகள் ஏராளம் இருந்தனர். இவர்கள் குண்டலினி சக்தி, உடம்பில் அமைந்த ஆறு சக்கரம் போன்றவற்றில் நாட்டம் செலுத்தினர். பிற்காலத்தில் சைவ வைனவ ஆதிக்கம்

ஏற்பட்ட போது இவர்களில் பலர் சித்தர் எனப்பட்டனர். மலைக் குகைகளில் வாழ்ந்த பௌத்தர்கள் விலங்குகளை எதிர்க்க ஆயுதம் ஏந்தாத நிலையில் சிலம்பாட்டம், களரி, வர்மம், செடிக் குச்சி போன்ற தற்காப்புக் கலைகளைப் பயிற்சி பெற்றிருந்தனர். மற்றவர்களுக்கும் பழக்கிக் கொடுத்தனர்.

புத்த பிரிவுகள் வளர்ந்து நான்கான போது வஜ்ராயன எனப்படும் பிரிவும் அவற்றில் ஒன்றாக விளங்கியது. இது உடலை அடக்கி ஆளும் கடும்தவம், யோகம் போன்ற பயிற்சிகளைக் கொண்டிருந்தது. மழையை தருவிக்கும் இந்திர வழிபாடு பௌத்தத்தில் இணைந்திருந்தது. இயற்கையை அடக்கி ஆளும் ஆற்றலும் சாக்கிய முனிகளுக்கு இருந்தது. இவர்கள் கண்மாய் கரையில் ஏரிக்கரையில் [யானையுடன் கூடிய] அய்யனார் என்ற பெயரில் தெய்வமாக வைத்து



போற்றப்பட்டனர். கரையோரத்தில் இருக்கும் ஐயனார் கரை உடையாமலும் வெள்ளம் அணை மீறாமலும் காப்பாற்றுவார் என்று நம்பினார். ஐயனார் பௌத்த தெய்வம் ஆவார். இன்றும் ஐயனார் வழிபாடு ஏரி காத்த ஐயனார், அருஞ்சுனை காத்த ஐயனார் என்ற பெயரில் தீவிரமாக உள்ளது.

ஐந்து, ஆறாம் நூற்றாண்டில் பௌத்தம் செல்வாக்குடன் இருந்த காலத்தில் காஞ்சிபுரமும் ‘தென்னகத்து நாளந்தா பல்கலைக்கழகமாக இருந்த காலத்தில் போதி தர்மர் அங்கிருந்து அயல் நாடுகளுக்கு பௌத்த சமயத்தைப் பரப்பப் புறப்பட்டார். பத்ம சம்பவ என்பவர் எட்டாம் நூற்றாண்டில் இங்கிருந்து கிளம்பினார். இவர் திபெத்துக்குப் போய் புத்த மடத்தை நிறுவினார்.

ஏழு எட்டாம் நூற்றாண்டுக்கு பின்பு பௌத்தம் இந்தியாவில் தனது செல்வாக்கை இழக்கத் தொடங்கியது. அனந்தவர்மன் கங்கா என்பவர் உருவாக்கிய கங்கப் பேரரசு பிராமணர்களுக்கு பேராதரவு அளித்தது. அரசனின் ஆதரவு பெற்ற பிராமணர்கள் பௌத்தர்களை வாதத்தில் தோற்கடித்து கொன்று குவித்தனர். அனங்க பீமா தேவர் என்ற அந்தணர் 32 பௌத்த துறவிகளை மொத்தமாக கொல்வதற்கு வழி வகுத்தார். இதனை

சைதன்யா பாகவதம் என்ற நூலில் காணலாம் என்று சுரேந்திர குமார் மோகன்ராம் என்பவர் *Buddhism in Orissa* என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

அனங்க பீமா தேவரின் சகோதரர் மகாதேவரம் பௌத்தர்களை வாதத்தில் தோற்கடித்துக் கொன்றார். இதன் பிறகு இந்தியாவில் பௌத்தம் தன் செல்வாக்கை இழக்கத் தொடங்கியது. பல பௌத்தர்கள் உயிருக்கு பயந்து வைதிக மதத்துக்கு மாறினர்.

தமிழ்நாட்டில் காஞ்சிபுரம் பௌத்தர்களின் தலைநகரமாக, கல்வி நகரமாக விளங்கியது. காஞ்சி என்ற சொல் நிலையாமையை உணர்த்தியது. இச்சொல்லே ஜப்பானியர் பின்பற்றும் சீன எழுத்துகளுக்கும் பெயராக அமைந்தது. இங்கிருந்து போதி தர்மர் முதலானோர் வெளிநாடுகளுக்குச் சென்று பௌத்த தர்மத்தை பரப்பினர். இவ்வாறு சென்ற துறவிகள் ஜப்பான் நாட்டுக்குச் சென்ற போது அங்கிருந்த மொழியை தமிழ் இலக்கணப்படி சீரமைத்தனர். சீனாவில் எழுத்துக்களை சீரமைத்துக் காஞ்சி என்று பெயரிட்டனர்.

பௌத்தம் தாம் பரவிய மொழிகளில் நடத்திய சீரமைப்பு போலவே பௌத்த

துறவிகள் ஜப்பான் நாட்டில் கலை இலக்கிய பண்பாட்டு கூறுகளில் பல புதுமைகளை அறிமுகப்படுத்தினர். அவற்றில் சில

## 1. பெரிய புடைப்புச் சிறப்பங்கள்

குகைகளில் வாழ்ந்த பக்தர்கள் மலைப் பாறைகளில் புடைப்புச் சிறப்பங்கள் செதுக்கினர். குகைகளுக்குள் தண்ணீர் வராமல் குகை வாசலில் புருவம் வெட்டியும், கற்களில் எழுத்துக்களைக் கல்வெட்டுகளாகப் பொறித்தும் பழகினர். இவ்வாறு புடைப்புச் சிறப்பங்கள் செதுக்குவதை ஜப்பான் நாட்டிலும் அறிமுகப்படுத்தினர். கல்வெட்டு எழுத்து கருத்து பரவல் முறையை ஜப்பானில் பதாகைகளில் எழுதி அறிமுகம் செய்தனர்.



## 2. பெரிய உருவச் சிலைகள்

வடநாட்டில் பெரிய புத்தர் சிலைகளை செய்து வணங்கி வந்த பௌத்தர்கள் தமிழகம் வந்ததும் அக்கலையை இங்கும் பரப்பினர். உடல் வலிமையையும் பாலியல் திறத்தையும் குறிக்கும் வகையில் யானை முகத்துடன் கூடிய மனித உருவச் சிலைகளை வடித்தனர். பிள்ளையார்பட்டி விநாயகர் சிலை போன்று சில சிலைகள் தமிழகத்தின் பாறைகளில்





புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டன. ஆலமரத்தின் அடியில் ஞானோதயம் பெற்ற புத்தரைக் குறிக்கும் வகையில் கல்லாலான மரத்தின் கீழ் தட்சணாமூர்த்தி சிலையை சீடர்களுடன் இருப்பதாகச் செதுக்கி வைத்தனர்.

பௌத்தர்கள் ஜப்பான் நாட்டுக்கு சென்ற போது அங்கும் பெரிய சிலைகள் செய்யும் பழக்கத்தை அறிமுகப்படுத்தினர். அங்கு இவ்வாறு செய்த பெரிய புத்தர் சிலையை ஜப்பானிய மொழியில் 'தாய் புத்சு' என்று அழைக்கின்றனர். 'தாய்' என்றால் மிகப்பெரிய என்றும் 'புத்சூ' என்றால் புத்தர் என்றும்

*பொருள்படும். காமகுரா மலையின் மேல் உள்ள மிகப் பெரிய புத்தர் சிலை இன்றும் பல வெளிநாட்டினரை கவர்ந்த புத்தர் சிலை ஆகும். [உலகம் சுற்றும் வாலிபன் படத்தில் இந்த சிலையைப் பார்த்ததும் விஞ்ஞானி எம்.ஜி.ஆருக்கு ஏற்பட்டிருந்த சித்தப் பிரமை தெளிவதாகக் காட்டியிருப்பர்].*

*ஜப்பான் மொழி சொற்கள் ம், ன் என்ற இரண்டும் கலந்த மூக்கொலி சாயலுடைய மெய்யொலியில் முடியும் அல்லது அனைத்தும் உயிரொலி சாயலுடன் முடிவுறும். புத் எனப்படும் வல்லின ஒற்று உடைய சொல் சு enunciative vowel பெற்று புத்சு என முடிகிறது.*

***பாத வழிபாடு***

*புத்தரின் பாதங்களை மட்டும் அவருடைய அடையாளமாக துறவிகள் தாம் வாழ்ந்த பாறைகளில் செதுக்கி வைத்து அதற்கு மலர் சூட்டி வழிபட்டனர். இந்தப் பாத வழிபாடு பின்னர் இந்துக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு 'இராமர் பாதம்' என்று பல இடங்களில் அழைக்கப்படுகிறது. மதுரையில் அழகரடி என்ற இடத்தில் இரண்டு பாதங்கள் மட்டுமே உள்ள ஒரு சிறு அறை கொண்ட கோவில் காணப்படுகிறது. இதனை சிலர் இராமர் பாதம் என்றும் அனுமன் பாதம் என்றும் அவரவர்*



விருப்பத்திற்கு ஏற்றவாறு அழைத்துக் கொள்கின்றனர். ஆனால் பாத வழிபாடு என்பது பௌத்தர்கள் அறிமுகப்படுத்தியது.

## 4. புகை மற்றும் ஆவி மருந்து

மலைக் குகைகளில் வாழ்ந்த துறவிகள் இரவில் புழு பூச்சிகள் தாக்காமல் இருக்க காய்ந்த சருகுகளைக் குவித்து புகை மூட்டம் போட்டனர். சில வேளைகளில் மழைக் காலங்களில் வெப்பத்திற்கும் கபால நீரை குறைப்பதற்காகவும் புகைப் போடுதல் மற்றும் ஆவி பிடித்தல் போன்ற சில மருத்துவ முறைகளைப் பின்பற்றினர். இப் பழக்கங்களை இவர்கள் ஜப்பானிற்கும் கொண்டு சென்றனர். அங்கு பௌத்தத் துறவிகள் கொண்டு வந்த பழக்கம் என்பதால் கோவில் வழிபாடுகளில் அதிகம் இடம்பெற்றது. புத்த விகாரங்களில்



சாம்பிராணிப் புகையும் பத்தி புகையும் பெரும் செல்வாக்கைப் பெற்றுள்ளது. தமிழகத்தில் அகில் புகை, ஐயவி புகை போன்றவை குறித்து சங்க இலக்கியங்களில் காண்கிறோம்.

### 5. தூண் அல்லது ஸ்தூபி

இந்தியாவில் வடக்கே கலிங்க நாட்டில் வாழ்ந்த பௌத்தர்கள் அங்கே உயரமான தூண்களைப் புத்தரின் நினைவாக எழுப்பி அதில் புத்தரின் பொன்மொழிகளை பொறித்து வைத்தனர். இதனைச் சாஞ்சி, சாரணாத் போன்ற இடங்களில் காணலாம். இதுபோன்ற தூண்கள் எழுப்பும் பழக்கம் பௌத்தர்களின் மதப் பிரச்சார முறைகளில் ஒன்றாகும். இந்த முறை சற்று மாறி ஜப்பான் நாட்டில் பதாகைகள் ஆக துணிகளில் மேலிருந்து கீழாக எழுதப்பட்டு தொங்கவிடப்பட்டன.

## 6. உணவு – உடம்பு – யோகம் – மருத்துவம்

பௌத்தர்கள் உடலை யோக சாதனமாக கருதியதால் உணவே மருந்து என்ற முறையைப் பின்பற்றி உடலையே மோட்ச சாதனமாக மாற்றினர். உடலை எரித்து மோட்சத்தை அடையலாம் என்றும் பௌத்த மதத்தினர் நம்பினர். உடலைப் பேணும் முறையை இவர்கள் தீவிரமாகப் பின்பற்றியதால் மனிதர்களுக்குரிய நோய்களுக்கும் சிகிச்சை முறைகளை அறிந்து வைத்திருந்தனர். இவர்கள் இலவச மருத்துவ மனைகளையும் தமிழகத்தில் நடத்தினர். மனிதர்களுக்கு மட்டுமல்லாது விலங்குகளுக்கும் மருத்துவமனைகளை நடத்தியதுதான் பௌத்தர்களின் சிறப்பு இயல்பாகும்..

அன்னதானம், அவ்ஷத தானம் ஆகியவை சமயக் கொள்கைகளாகப் பின்பற்றப்பட்டன. ஜப்பானில் உணவே மருந்தாகப் பின்பற்றப்பட்டதால் அங்கு மனிதர்களின் வாழ்நாள் கூடியது. உலக அளவில் அதிக முதியோர் வாழும் நாடாக அந்நாடு புகழ் பெற்றது. தமிழ்நாட்டிலும் ஜப்பானிலும் உணவு தெய்வீகமாகப் போற்றப்படுவதற்கு முக்கிய காரணம் இவ்விரு நாடுகளிலும் புத்தம் ஏற்படுத்திய தாக்கமே ஆகும்.

## 7. பல துறை ஞானம்

பௌத்தர்கள் மதக் கருத்துக்களையும், உடலைப் பேணும் முறையையும், மருத்துவம்,

சோதிடம், ரசவாதம், மாந்திரீகம் போன்ற துறைகளையும் மலைக்குகைகளில் இருந்தபடி மற்ற மாணவர்களுக்குக் கற்றுக் கொடுத்தனர். பின்னர் சில மன்னர்களின் ஆதரவு பெற்று பள்ளிகளை நடத்தி குரு சிஷ்ய முறையில் இவற்றைப் பரிபாஷையில் கற்றுக் கொடுத்தனர். இதனால் மற்றவர்கள் இவ் விஷயங்களை அறிந்து கொள்வது இயலாமல் போயிற்று.

ஜப்பானில் ‘ஷாவோலின்’ எனப்படும் மடங்களை நிர்மாணித்து சிறு வயதில் இருந்தே துறவிகளுக்கு மூலிகைகளின் மருத்துவ குணம், வானியல் அதிசயங்கள் ஆகியவற்றைக் கற்று கொடுத்தனர். இவர்கள் பொது மக்களிடம் இருந்து விலகியே இருந்தனர். பௌத்த மடம் என்பது சமயம் மட்டும் வளர்க்கவில்லை துறவு, மருத்துவம், சோதிடம், ரசவாதம் போன்றவற்றையும் தற்காப்புக் கலைகளையும் சேர்த்தே வளர்த்தது.

பௌத்தர்களின் சமயக் கல்வியின் முழு வீச்சை கேரளா மாநிலத்தில் காணலாம். அங்கு பௌத்தர்களின் தற்காப்புப் போர் முறை, மருத்துவ முறை, தாந்திரிக வழிபாட்டு முறை ஆகியன தமிழ் நாட்டை விட அதிகளவில் காணப்படுகின்றன. தமிழ்நாட்டில் திராவிட இயக்கங்கள் மருத்துவம், ஜோதிடம் போன்றவை மூட நம்பிக்கைகள் என்று

பிரச்சாரம் செய்து அவற்றை இங்கிருந்து அகற்றிவிட்டன. மடம், மடாதிபதி, இளைய மடாதிபதி போன்ற அமைப்புகளும் பொறுப்புகளும் இங்கிருந்து ஜப்பானுக்குக் கொண்டு செல்லப்பட்டன.

## 9. தொழில் வழி சாதிப் பிரிவுகள்

இந்தியாவின் மனுதர்ம சாஸ்திரம் நான்கு வகை வருணாசிரம முறையை எடுத்துரைத்தாலும் தொழில்வழி சாதிப் பிரிவை அறிமுகம் செய்தவர்கள் பௌத்தர்களே என்ற ஒரு கருத்தும் நிலவுகின்றது. இக்கருத்துக்கு அரண் சேர்ப்பது ஜப்பான் நாட்டில் வழக்கில் உள்ள தொழில்வழி சாதிப் பிரிவாகும். ஜப்பானில் குறிப்பிட்ட சாதியை அல்லது குறிப்பிட்ட தொழிலைச் செய்பவர்கள் குறிப்பிட்ட கிராமங்களில்



ஜப்பானிய காவல் தொழில் பிரிவினர் (சமுராய்)

மட்டும் வசிக்கின்றனர். இந்தக் கிராமத்தைச் சேர்ந்தவர் என்று ஒருவரை குறிப்பிட்டாலே அவர் இன்ன தொழிலைச் செய்கின்றவர் என்பது அந்நாட்டில் புரிந்துவிடும். அங்கு சமுராய் என்பவர்கள் போர்த் தொழில் செய்யும் தியாக மறவர்களாகப் பெருமதிப்பு பெற்றுள்ளனர். இவர்கள் மன்னருக்காக தனது இன்னுயிரைத் தீயிலிட்டும், வெட்டியும் தியாகம் செய்வர்.

தமிழகத்தில் தப்பாட்ட கலைஞர்கள் இருக்கின்றனர். 'தப்பு' என்ற இசைக்கருவி ஜப்பானிலும் இசைக்கப்படுகின்றது. அங்கு இந்த இசைக்கருவி தப்பு என்ற பொருள் தரும் *chigaimasu* சிகாயி மாசு என்று அழைக்கப்படுகின்றது. சிகாயிமாசு என்றால் தப்பு [மிஸ்டேக்] என்பது பொருள்.

தப்பாட்டம் மற்று தப்பு என்ற இசைக்கருவி குறித்து மதுரை விஸ்கான்சின் தமிழ் புரோகிராமின் ஒருங்கிணைப்பாளராக இருந்த திரு ராஜசேகரும் அவரது அமெரிக்க நண்பரும் ஆராய்ச்சி செய்து கட்டுரை எழுதினர். இந்த ஆராய்ச்சியில் ஜப்பானில் தொழில் வழி சாதி பிரிவு இருப்பதும் தெரிய வந்தது. இது பௌத்தர்களால் தமிழகத்திலும் ஜப்பானிலும் கொண்டு வரப்பட்டதா? என்பது மேலும் ஆராய்ச்சிக்குரியதாகும்.



# *2. தமிழும் ஜப்பானிய மொழியும் – சில ஒற்றுமைகள்*

*[**தமிழுக்கும் ஜப்பானுக்கும்** ஆன தொடர்புகள் பற்றி முன்பே சுசுமோ ஓனோ, ஆஷர், பட்டிமன்ற பேச்சாளர் தமிழ்ப் பேரறிஞர் சாலமன் பாப்பையா அவர்களின் மகள் பாலம்மா ஆகியோர் கட்டுரைகளும் நூல்களும் எழுதி வெளியிட்டுள்ளனர். அந்நூல்கள், கட்டுரைகள் அனைத்தையும் வாசிக்கும் வாய்ப்பு கிடைக்க வில்லை என்றாலும் சிலவற்றை வாசித்திருக்கிறேன். ஜப்பான் மொழியை ரோமா ஜி எனப்படும் ரோமன் எழுத்துக்கள் மூலமாக படித்த காரணத்தாலும் தமிழ் வழியே ஜப்பான் மொழியை படிப்பது எளிது என்பதை உணர்ந்து அதற்காக ஒரு நூலை உருவாக்கியதாலும் இரு மொழிகளுக்கும் இடையிலான மொழி மற்றும் பண்பாடு தொடர்பான ஒற்றுமைகளை உணர்ந்திருந்ததால் அவை ஈண்ணூ ஊளா ஆஆ உருவெடுத்துள்ளன.]*

### *பௌத்தமும் தமிழும்*

*தமிழ் ஜப்பான் மொழிகளுக்கு இடையிலான ஒற்றுமைகளுக்கு மூல காரணம்*

புத்த மதம். இங்கிருந்து இம்மதம் ஜப்பானுக்குப் பயணித்த போது துறவிகள் தமிழையும் எடுத்துச் சென்றனர். இங்கு இந்து மத சுலோகங்கள் சமஸ்கிருத மொழியில் இருப்பது போலவே அங்கு தமிழ் ஆன்மீக மொழி ஆயிற்று என்பதை காஞ்சி என்ற சொல்லே உணர்த்துகிறது. அங்கு போனதும் அங்கிருந்த ஜப்பானிய மொழியைச் செப்பனிட புத்த துறவிகளுக்கு தமிழ் உதவியது.

ஜப்பான் மொழிக்கும் தமிழ் மொழிக்கும் கட்டமைப்பில் அதிக அளவில் ஒற்றுமைகள் இருப்பதைக் காணலாம். காஞ்சிபுரத்திலிருந்து பௌத்த மதத்தைப் பரப்புவதற்காக ஜப்பான் மற்றும் சீனாவுக்குச் சென்ற பௌத்தத் துறவிகள் மொழியையும் சேர்த்தே எடுத்துச் சென்றனர். தமிழ் மொழியில் இருக்கும் மொழி கட்டமைப்பை அங்கே இருந்த மொழிகளில் சேர்த்துப் புதிய கட்டமைப்பை உருவாக்கினர்.

**காஞ்சி**

ஜப்பானில் பெயர்ச்சொல் மற்றும் வினைச்சொற்களைக் குறிக்க பயன்படுத்தும் பல எழுத்துக்கள் சீன எழுத்துக்கள் ஆகும். அந்த சீன எழுத்துக்களை ஜப்பானியர் காஞ்சி என்ற பெயரால் அழைக்கின்றனர். காஞ்சி என்பது நிலையாமைத் தத்துவத்தை உணர்த்துவதாகச் சங்க இலக்கியத்தில் புறத்திணையில் ஏழு

திணைகளில் ஒன்றாக இடம் பெற்றிருந்தாலும் பௌத்தர்கள் இப்பெயரில்தான் தங்களின் நிலையாமைத் தத்துவத்தைப் பரப்பினர். தமிழகத்தில் பௌத்தர்களின் இருப்பிடமாக இருந்த ஊர் காஞ்சிபுரம். அவர்கள் வணங்கிய தாரா தேவியை [காமாட்சியைப்] பின்னர் சைவ சமயம் தன்னகப்படுத்திக் கொண்டது.

## ஜப்பான் மொழியின் வரி வடிவம்

ஜப்பான் மொழியில் மூன்று வகையான எழுத்து வகைகள் பின்பற்றப்படுகின்றன. பெயர்ச்சொல் வினைச்சொல் ஆகியவற்றை எழுத உதவும் சீன எழுத்துக்கள் காஞ்சி எனப் பெயர் பெறும். இடைச்சொற்கள் ஜப்பானிய ஒலிப்பு முறையுடன் ஹிரா கானா [hira gana] என்ற வரி வடிவிலும் இவை இரண்டும் அல்லாத பிறமொழிச்சொற்களை கத்தா கானா [katha gana] என்ற வரி வடிவிலும் எழுதப்படும்.

| Katakana | Kanji | Hiragana |
| --- | --- | --- |
| ワ シ ン ト ン<br>Wa shing ton | 和 新 頓<br>Wa shing ton | わ し ん と ん<br>Wa shing ton |
| ワ シ ン ト ン<br>Wa shing ton | 和 新 頓<br>Wa shing ton | わ し ん と ん<br>Wa shing ton |
| ワ シ ン ト ン<br>Wa shing ton | 和 新 頓<br>Wa shing ton | わ し ん と ん<br>Wa shing ton |
| ワ シ ン ト ン<br>Wa shing ton | 和 新 頓<br>Wa shing ton | わ し ん と ん<br>Wa shing ton |

தமிழில் இலக்கணக்காரர்கள் பிற மொழிச் சொற்களைத் தமிழ் மரபுக்கேற்ப ஒலிப்பு முறைக்கேற்ப மாற்றுவதைத் தற்சமம், தற்பவம் என்பர். நம்மிடம் மூன்று வரி வடிவங்கள் இல்லாவிட்டாலும் இச் சிந்தனை இங்கிருந்து ஜப்பானுக்குப் போயிருக்க வாய்ப்புண்டு. ஷர்ட் *[shirt]* எனப்படும் ஆங்கிலச் சொல்லை ஜப்பானிய மொழியில் ஷாத்சு *[shatsu]* என்று தம்முடைய ஒலிப்புக்கு ஏற்ற வகையில் மாற்றி அமைத்தனர். ரத்னம் என்பதைத் தமிழில் ரத்தினம் என்றாவது போல ஜப்பான் மொழியில் பிறமொழிச் சொற்கள் ஜப்பான் மொழியின் ஒலிப்புக்கு ஏற்ப மாற்றப்பட்டன. ஜப்பான் மொழியில் ‘ட’ என்ற ஒலி இல்லாததால் கம்ப்யூட்டர் என்பது ‘**கம்ப்யுத்தோ**’ எனப்படுகிறது.

உயிரொலிகள் ஜப்பானிலும் ஐந்து மட்டுமே. தமிழில் க,ச,த,ப ஆகிய நான்கு ஒலிகளுக்கும் மாற்று ஒலிகள் உண்டு. இதனை மொழியியலார் *allo phones* என்பர். அதாவது *k > g, h, kk,* என பல வகையாக ஒலிக்கப்பெறும். க என எழுதப்படும் வரிவடிவத்திற்கு பக்கம் *[pakkam]*, பகல் *[pahal]*, பங்கம் *[pangam]* என *kka , ha, ga* என்று மாற்று ஒலி வடிவங்கள் பேச்சு வழக்கில் உள்ளன. இவற்றை எழுத்தில் நம்மால் வேறுபடுத்திக் காட்ட இயலாது.

*ஆனால் ஜப்பானிய மொழியில் இதற்காக தனித்தனியாக வரி வடிவங்களை அமைத்தனர். மாற்றொலி என்பதற்கு அடையாளமாக இவற்றில் மிகச் சிறிய stroke ஐ பயன்படுத்தி வேறுபாடு காட்டுவர்.*

**குற்றுகரம்**

*தமிழில் காணப்படும் குற்றியலுகரம் போல பண்டைய மொழிகள் பலவற்றிலும் உயிரொலிகளின் குறுக்கத்தைக் காணமுடியும் தமிழ் மொழியில் பசு, மாசு போன்ற சொற்களில் வரும் சு ஒலிப்பது போல 'தெசு' [இதன் பொருள் 'இருக்கிறது'] என்ற சொல் ஒலிக்கப்படுகிறது. தெசு என்ற சொல்லில் வரும் ஈற்று உகரம் குற்றுகரமாக ஒலிக்கப்படும். பசு, மாசு போன்ற சொற்களின் ஈற்றுகரம் குற்றியலுகரமாக ஒலிக்கப்படுவது போல 'தெசு'வும் ஒலிக்கப்படும்.*

**மெய்மயக்கம்**

*தமிழில் உள்ள **consonant clusters** அல்லது மெய்மயக்கம் போல ஒரே மெய்யெழுத்து இரட்டித்து அல்லது மெய்யெழுத்து சேர்ந்து வரும் இயல்பு ஜப்பானிய மொழியிலும் உண்டு. ஜப்பானிய மொழியில் இந்த மெய் மயக்கத்தில் இடம்பெறும் ஒவ்வொரு மெய் எழுத்தையும் ஒரு மாத்திரை அளவுக்கு அழுத்தி*

ஒலிக்கின்றனர். **ஷித்தே மாசு** என்றால் தெரியும் என்பது பொருள். இதில் வரும் **‘ஷித்தெ’** என்பது ஒன்று + ஒன்று + ஒன்று என மூன்று மாத்திரை அளவில் ஒலிக்கப் பெறும்.

### மூக்கொலிச் சாயல்

தமிழில் சொல்லின் ஈற்றில் இடம்பெறும் னகர, மகர ஒற்றுகள் மூக்கொலி சாயலுடன் முடிவு பெறும். இதனை மொழியியலார் ***nasalization*** என்று குறிப்பிடுவர். இதற்கென ஒரு எழுத்து உண்டு. இது இறுதியில் வரும்போது முழுதாக ன் என்றோ; ம் என்றோ ஒலிக்கப் பெறாது இரண்டுக்கும் இடையிலான ஒரு ஒலிப்பைப் பெறும். பொதுவாக சொல்லின் இறுதியில் வரும் மெய்யெழுத்துக்கள் மூச்சை அடக்கி நிறுத்துவதால் அத்துடன் ஒரு உயிரொலியைச் சேர்த்து, முழுமையாக மூச்சை நிறுத்தாமல் அரை ஒலியாக மூச்சை விட்டு ஒலிப்பது தமிழிலும் ஜப்பானிலும் பழக்கத்தில் உள்ளது.

இவை அனைத்தும் இரு மொழிகளிலும் ஒலி அமைப்பில் உள்ள ஒரு சில ஒற்றுமைகள் ஆகும்.

### ஜப்பானிய மொழியில் தமிழ்ச் சொற்கள்

சுசுமு ஓனோ என்ற ஜப்பானியப் பேரறிஞர் ஜப்பான் மொழியில் சுமார் நான்காயிரம் தமிழ்ச்

சொற்கள் இருப்பதாகக் கண்டறிந்துள்ளார். இந்தியாவில் நீதிமன்றம், அரசு நிர்வாகம் போன்ற துறைகளில் உள்ள ஆட்சி மொழிச் சொற்களில் உருது மொழிப் பயன்பாடு [தாக்கல், தரப்பு, மகஜர், ஷரத்து] ஏராளமாக உள்ளது. இதற்குக் காரணம் இந்தியாவை ஆண்ட முகலாய மன்னர்களின் ஆட்சி மொழி உருதுவாக இருந்ததே ஆகும். அதுபோல ஜப்பானில் பௌத்த மதத்தை பரப்ப சென்ற தமிழ் நாட்டைச் சேர்ந்த புத்த துறவிகள் மதத்தைப் பரப்பும் போது அதிகளவில் தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தினர்.

கட்டமைப்பு வகையில் ஜப்பான் மொழியும் தமிழ் மொழியைப் போலவே ஒட்டுநிலை மொழியாகக் கட்டமைக்கப்பட்டுள்ளது. இதனை *agglutinative language* என்று மொழியியலார் குறிப்பிடுவர். தமிழில் பகுதி இடைநிலை, சந்தி, சாரியை, விகுதி, தேற்றேகாரம், வினா, குறிப்பு போன்றவை ஒன்றினோடு ஒன்று சேர்வது போல ஜப்பானிய மொழியிலும் அமைந்துள்ளது.

## பெயர்ச்சொல்லும் வேற்றுமை உருபுகளும்

தமிழ்மொழியில் பெயர்ச் சொற்களோடு வேற்றுமை உருபுகளான ஐ, ஆல், கு, உடைய, இல், இல் இருந்து, அது போன்றன தனித்தனியாக வந்து சேரும். அது போலவே

ஜப்பான் மொழியிலும் பெயர்ச் சொற்களின் இறுதியில் வேற்றுமை உருபுகள் சேர்க்கப்படும். இவை **ஹிரா கானா** என்ற வரி வடிவத்தில் எழுதப்படும். தமிழில் முதல் வேற்றுமைக்கு உருபு கிடையாது. ஆனால் ஜப்பான் மொழியில் முதல் வேற்றுமைக்கும் ‘வா’ என்ற உருபு சேர்க்கப்படும்.

எ-டு

வாதாஷி வா ராஜேசுவரி தெசு.

[நான் ராஜேசுவரியாக இருக்கிறேன்]

**வேற்றுமை உருபுகள் இணைப்பு**

பெயர்ச்சொல்லோடு **ஓ** என்பது செயப்பாட்டு பொருளிலும் **நோ** என்பது உடைய என்ற பொருளிலும் **னி** என்பது இடப் பொருளிலும் **மோ** என்பது உம் என்னும் எண்ணும்மை பொருளிலும் **காரா** என்பது இடத்திலிருந்து என்று நீங்கல் பொருளிலும் பயன்படும்.

எ-டு

வாதாஷி**னோ** – என்னுடைய

வாதாஷி**மோ** - நானும்

நிப்பொன் **னி** – ஜப்பானில்

ஹோான் **ஓ** - புத்தகத்தை

**வினைச்சொல் உருவாக்கம்**

*தமிழைப் போலவே ஜப்பானிய மொழியிலும் உயர்திணை, அஃறிணை வேறுபாடுகள் உண்டு. ஆனால் எண், இடம், பால் குறிக்கும் விகுதிகள்* ***[png suffixes - person number gender suffixes]*** *கிடையாது. மலையாள மொழியை போல அவன் வரும்; அவள் வரும்; அது வரும்; என்பதாகவே வினைச்சொற்கள் ஜப்பானிய மொழியில் அமைந்துள்ளன.*

**காயிமாசு** – *வாங்குகிறேன் வாங்குகிறாய் வாங்குகிறார்,*

**நோமிமாசு** – *குடிக்கிறேன், குடிக்கிறாய், குடிக்கிறார்,*

**ஹனாஷிமாசு** – *பேசுகிறேன், பேசுகிறாய், பேசுகிறாள்*

**இயேமாசு** - *சொல்கிறேன், சொல்கிறாய், சொல்கிறார்*

**வினாவும் வியப்பும்**

*தமிழைப் போலவே ஜப்பானிய மொழியில் பின் ஒட்டுக்கள் சேர்ந்து வினாப் பொருளையும் வியப்புணர்வையும் தரும்.*

*எ-டு*

*காயிமாசு* ***கா?*** *வாங்குகிறாயா? வாங்குகிறாரா? வாங்குவோமா?*

*இயேமாசு* ***கா****? - சொல்கிறாரா? சொல்கிறாயா?*

***தமிருகு ஹனாஷிமாசுகா****? தமிழ் பேசுவீர்களா?*

**கோஹி ஓ நோமிமாசுகா***? காபியைக் குடிக்கிறாரா?*

*தெசு என்ற சொல்லுடன்* **னே** *இணையும் போது வியப்புச் சொல்லாக மாறும். நாம் தமிழில் அப்படியா என்று சொல்லி வியப்பது போல* **தெசுனே** *என்னும் போது அதே வியப்புணர்வு ஜப்பானிலும் வெளிப்படும்.*

***மதிப்புச் சொற்கள்***

*தமிழில் வினைச் சொற்களின் விகுதி ஆளுக்குரிய மதிப்பை உணர்த்திவிடும் ஆனால் ஜப்பானிய மொழியில் அந்த விகுதி இல்லை என்பதால் பெயர்ச் சொல்லோடு சேர்த்து* ***குதாசாயி*** *அல்லது வினைச் சொல்லோடு* ***த்தெ குதாசாயி*** *என்ற சொல்லைச் சொல்லியே ஜப்பானியர் மரியாதையாக ஒரு பொருளைக் கேட்டுப் பெற வேண்டும்.*

*எ-டு [தெ குதாசாயி]*

**ஹோராண் ஓ குதாசாயி** – பேனாவைக் கொடுங்கள்

***கிப்பு ஓ குதாசாயி*** *- சீட்டைக் கொடுங்கள்*

*எ-டு [த் தெ குதாசாயி]*

***மிசெத்தெ குதாசாயி*** *- பாருங்க [மிசே – பார்]*

**ஒகு த்தெ** குதாசாயி – *அனுப்புங்க [ ஒகே – அனுப்பு]*

***சுவா த்தெ குதாசாயி*** *– உட்காருங்க [சுவாத்தெ – உட்கார்]*

***எதிர்மறைச் சொல் வடிவம்***

*தமிழில் எதிர்மறைப் பொருளைக் குறிக்க இல்லை என்பது சேர்க்கப்படும். ஜப்பானிய மொழியில்* ***சென்*** *என்பது சேர்க்கப்படும்.*

***இமாசு*** *என்றால் இருக்கிறது;* ***இமாசென்*** *என்றால் நிகழ் காலப் பொருண்மையில் இல்லை.* ***இமாசென் தேஷித்தா*** *என்றால் இறந்த காலப் பொருண்மையில் இல்லை. இதுவே* ***தேஷித்தா கா*** *என்றால் இல்லையா என்ற எதிர்மறை இறந்தகாலப் பொருண்மையுடன் வரும்.*

**எண்ணும்மை**

தமிழில் ஒவ்வொரு பெயருடனும் 'உம்' எனும் இடைச்சொல் சேர்த்துத்தான் எண்ணும்மை வரும். ஆங்கிலத்தில் பெயர்களை வரிசைப்படுத்தி விட்டு கடைசிப் பெயருடன் *and* சேர்த்தால் போதும். ஜப்பானிய மொழியில் தமிழைப் போல ஒவ்வொரு பெயருடனும் **மோ** எனும் இடைச்சொல் சேர்க்க வேண்டும்.

*எ-டு*

***சென்சேய் மோ GAKUSEI மோ கிமாசு*** – ஆசிரியரும் மாணவரும் வருகின்றனர்.

***வாதாஷி மோ gare மோ gakusei தேசு*** – நானும் அவனும் மாணவர்கள்

**உம் எனும் இடைச்சொல்**

தமிழில் பயில்வதைப் போல உம் என்னும் இடைச்சொல் ஜப்பானிய மொழியிலும் சுட்டுப் பெயர்களோடு வினா வடிவங்களோடு பெயர்ச்சொற்களோடு எனப் பலவகையிலும் பயின்று வரும்.

*எ-டு*

***நானி மோ அரிமாசென்*** -- எதுவும் இல்லை.

***தாரெ மோ இமாசென்*** – யாரும் இல்லை.

**கியோ மோ கினோ மோ** – நேற்றும் இன்றும்.

**ஹோண் மோ என்பித்சு மோ குதாசாயி** – பேனாவும் பென்சிலும் கொடுங்க.

**எண்ணுப்பெயர்கள்**

தமிழில் இருந்து ஜப்பானிய மொழிக்கு அளித்த அருங்கொடை எண்ணுப்பெயர்கள் ஆகும். ஒன்று இரண்டு, மூன்று என்பதை **இச்சி**, **நி, சான்** என சொல்வர். பத்து **ஜூ** எனப்படும். அடுத்து பதினொன்று வரும்போது

பதின் ஒன்று - **ஜூ இச்சி**

பன்னிரெண்டு – **ஜூ நி**

பதின் முன்று – **ஜூ சான்**

இருபது - **நி ஜூ**

இருபத்தியொன்று – **நி ஜூ இச்சி**

இருபத்தியிரண்டு – **நி ஜூ நி**

இவ்வாறு எண்ணுப்பெயர்களின் அடுக்கு முறை [arrangement] தமிழைப் போலவே ஜப்பானிய மொழியிலும் அமைக்கப் பட்டுள்ளது.

**சுட்டுப்பெயர்களும் வினாப்பெயர்களும்**

பழந்தமிழ் இலக்கணத்தில் சுட்டுப் பெயர்களில் அண்மைச்சுட்டு [அ] சேய்மைச்சுட்டு

*[இ] ஆகியவற்றிற்கு இடையே இடைச்சுட்டு என்ற ஒரு வகையும் காணப்படுகிறது. மலையாளத்திலும் இந்த இடைச்சுட்டான உகரம் பயன்படுகிறது. ஜப்பானிய மொழியிலும் இந்த மூவகைச் சுட்டுகள் உண்டு. இடைச்சுட்டு என்பது கண்ணுக்கு தெரிந்த தொலைவில் உள்ள ஆனால் கைக்கெட்டாத தொலைவில் உள்ளவற்றைக் குறிக்கிறது. இவற்றைப் போலவே வினாப் பெயர்களும் உண்டு*

*எ-டு*

***அனோ** = அந்த*

***கொனோ** – இந்த;*

***சோனோ** – இடைப்பட்டது*

***கோனோ** – எந்த ?*

***அனோ எம்பித்சுவா வாதாஷினோ எம்பித்சு தெசு***
*அந்த பென்சில் என்னுடைய பென்சிலாக இருக்கிறது.*

***அரே** – அது ;*

***கோரே** – இது ;*

***சோரெ** - இடைப்பட்டது*

***தோரே** – எது?*

***தாரே*** *– யார்?*

***அசோகோ-*** *அங்கெ ;*

***கோகோ –*** *இங்கே*

***சோகோ-*** *இடைப்பட்டது*

***தோகோ****? எங்கே*

***கோகொ னி வா தாரே மோ இமாசென்***

*இங்கே [இந்த இடத்தில்] யாரும் இல்லை.*

***நிறைவு***

*தமிழகத்திலிருந்து சென்ற பௌத்தர்கள் தமிழ் மொழியின் அமைப்பில் ஜப்பான் மொழியின் இலக்கணத்தைக் கட்டமைத்தனர். சங்க இலக்கியத்துக்குரிய ஐந்திணை, நிலமும் பொழுதும், கருப்பொருள் பாகுபாடு போன்ற அமைப்புகளும் ஜப்பானின் பழங்கவிதைகளில் காணக் கிடைக்கின்றன. மொழி, இலக்கணம் தவிர்த்து தொழில் அடிப்படையிலான சமூகப் பாகுபாடு, தொழில் வாரியான ஊர்கள் வழிபாடு, பழக்க வழக்கம், நம்பிக்கை போன்ற பல ஒற்றுமைகள் இரு மொழிகளுக்கும், இரு நாடுகளுக்கும் இடையே காணப்படுகின்றன.*



# 3. நெருப்பும் புகையும் !

பழந்தமிழ் நாட்டில் நிறுவனப் படுத்தப்படாத சமயம் இருந்து வந்த காலத்தில் தமிழகம் வந்த பௌத்தமும் சமணமும் இங்கே விரைந்து பரவத் தொடங்கின. கி. மு. 261இல் நடந்த கலிங்கப் போருக்குப் பிறகு அசோக மாமன்னர் தன் மகன் மகேந்திரனையும் மகள் சங்கமித்திரையையும் பல நாடுகளுக்கு அனுப்பிப் பௌத்தத்தைப் பரப்பும்படி செய்தார்.

சங்கமித்திரை கலிங்கத்தில் இருந்து கடல் வழியே பயணம் செய்து வந்ததால் நாகப்பட்டினம், கன்யாகுமரி மற்றும் இலங்கை பகுதிகளில் பௌத்த விகாரைகள் எழுப்பப்பட்டு பௌத்த சமயம் அவற்றைச் சுற்றியுள்ள பகுதிகளில் செழிக்கத் தொடங்கியது. நாகப்பட்டினத்தில் புத்தப் பல்கலைக்கழகம் இருந்ததாகத் தொல்லியல் ஆய்வாளர் முனைவர் பத்மாவதி தெரிவித்தார். அக்காலகட்டத்தில் கடல் வழிப் பயணம் நடைமுறையில் இருந்ததால் தென் கிழக்கு நாடுகளிலும் பௌத்தம் விரைந்து பரவியது.

தமிழகத்து பௌத்த துறவிகள் ஜப்பான், சீனா, கொரியா போன்ற நாடுகளுக்கும் பௌத்தத்தை எடுத்துச் சென்றனர்.

தமிழகத்தில் இருந்து ஜப்பான் சென்ற துறவிகள் இங்குள்ள பல சமய சமூக நடைமுறைகளையும் தங்களோடு கொண்டு சென்று, தாம் சென்ற நாடுகளில் பௌத்தத்தோடு சேர்த்துப் பரப்பினர். அவ்வாறு கொண்டு செல்லப்பட்டதில் நெருப்பும் புகையும் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளன.

**குகையும் புகையும்**

பௌத்தர்கள் மலைகளில், குகைகளில் கூட்டம் கூட்டமாக வசித்து வந்தனர். இரவில் வானத்தின் நட்சத்திரங்களை நுணுகி நோக்கி வானவியல் ஆராய்ச்சிகளில் ஈடுபட்டனர். செடி, கொடி, மரம் புல், பூண்டு போன்றவற்றின் மருத்துவ இயல்புகளை அறிந்து கொண்டனர். காட்டு விலங்குகளையும், பறவைகளையும் பற்றி விரிவாகத் தெரிந்து கொண்டனர். அவை குகைகளுக்குள் வந்து விடாமலிருக்க நெருப்பையும் புகையையும் பயன்படுத்தினர்.

மலைக் குகைகளை அறிவியல் பரிசோதனைக் கூடங்களாக்கி இரசவாதம் செய்தனர். மருத்துவம், சோதிடம், இரசவாதம்,

மாந்திரிகம் போன்ற கலைகளில் தேர்ச்சி பெற்றனர். ஆயுதம் இல்லாத தற்காப்புக் கலைகளை உருவாக்கினர். போதி சத்துவர்களாக உயர்வு பெற்றனர். இவர்கள் மற்ற நாடுகளுக்குச் சென்று பௌத்தத்தைப் பரப்பிய போது இங்கு தாம் கற்றவற்றையும் நடைமுறைப் படுத்தியவற்றையும் அந்த நாடுகளிலும் பரப்பினர். அவ்வாறு நெருப்பும் புகையும் பற்றிய கருத்துகளும் நடைமுறைகளும் தமிழகத்தில் இருந்து ஜப்பானுக்குக் கொண்டு செல்லப்பட்டதை இக்கட்டுரையில் காணலாம்.

**மூலிகைப் புகை**

பண்டைத் தமிழிலக்கியத்தில் ஐயவி புகைத்தல், அகில் புகைத்தல் போன்றவை



ஐயவி

மருத்துவப் பண்புகள் உடையனவாக சுட்டப்பட்டுள்ளன. ஆசிய நாடுகளில் குறிப்பாக கீழை நாடுகளில் கிறிஸ்து பிறப்புக்கு முன்பிருந்தே நறுமணப் புகை அரண்மனைகளிலும், தெய்வ ஸ்தலங்களிலும் பயன்பட்டுள்ளது. நறுமணப்புகை மூளைக்கு சுறுசுறுப்பை தரும் என்பது ஓர் அறிவியல் கண்டுபிடிப்பும் ஆகும்.

குகைகளில் வாழ்ந்த போதிசத்துவர்கள் புகையின் பலனை நன்கு அறிந்திருந்தனர். மூலிகைச் செடிகளை எரித்துப் புகையை உருவாக்கி விஷப் பூச்சிகளிடமிருந்து தம்மைத் தற்காத்துக் கொண்டனர். தம்மை ஊக்கப்படுத்தவும் புகையைப் பயன்படுத்தினர். செம்பு, தங்கம் போன்றவற்றை நெருப்பில் புடமிட்டனர். நெருப்பும் புகையும் பௌத்தத் துறவிகளின் வாழ்க்கையில் ஓர் அங்கமாகத் திகழ்ந்தன.

## பௌத்த சமய மரபில் புகை

பௌத்தத் துறவிகள் துறவு மேற்கொள்ளும் முன்பு அகர் பத்திகளால் தங்கள் உடம்பில் வளையம் வளையமாக சூடு வைத்துக் கொள்வது உண்டு. 6, 7, 12 என்று இந்த வளையங்கள் சூட்டின் அடையாளத்தை காட்டும். மூளைக்குப் புகை சுறுசுறுப்பை அளிக்கும் என்ற கருத்து பௌத்தத் துறவிகளிடம் இருப்பதை அறிந்தஜான்,



ஹாப்கின்ஸ் பல்கலைக்கழக விஞ்ஞானிகள் மற்றும் எருசலேமிலுள்ள ஹீப்ரு பல்கலைக்கழக விஞ்ஞானிகள் அவர்களைக் கொண்டு ஓர் ஆராய்ச்சி நடத்தினர்.

ஆராய்ச்சியின் விளைவாக புகை ஒருவருடைய படபடப்பை, மன அழுத்தத்தைப் போக்க உதவும் என்றும் மென்மையான புகை ஒருவருடைய இரத்த ஓட்டத்தை விரைவாக்கி அவருக்கு இனிமையான மன நிலையைக் கொண்டு வரும் என்றும் கண்டுபிடித்தனர்.

**தூய்மையாக்கத்தில் நீரும் நெருப்பும்**

ஜப்பானுக்குப் பௌத்தம் வருவதற்கு முன்பிருந்த ஷிந்தோயிசம் என்ற மதம் நீரினால் ஒரு பொருள் தூய்மையாகும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தியது. பௌத்தம்

நெருப்பினால் தூய்மையாகும் என்ற சமய நம்பிக்கையைப் புதிதாகப் புகுத்தியது. தூய்மையாக்கச் சடங்கு [purifying ritual] என்று இச்சடங்கை சமய இயலார் குறிப்பிடுவர். நெருப்பு புத்தரின் ஞானத்தைப் பிரதிபலிப்பதால் நெருப்புச் சடங்குகளால் அஞ்ஞானம் அகன்று ஞானம் பிறக்கிறது.

தமிழகத்தில் **தீ மிதித்தல், தீச்சட்டி எடுத்தல், தீ மெழுகுதல்,** நெருப்பு வளையங்களுக்குள் குதித்து வருதல், உடம்பில் நெருப்பு வைத்துக் கொண்டு உயரத்தில் இருந்து கீழே இருக்கும் தண்ணீர் தொட்டியில் குதித்து காயமின்றி வெளியே வருதல்; உடம்பைச் சுற்றி பல



வளையங்களில் பல தீச்சட்டிகளை 21, 11 என்ற கணக்கில் பொருத்தி வைத்து அதனைச் சுமந்து கொண்டு வருதல் போன்ற சடங்குகள் நாட்டார் வழிபாட்டில் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளன. இவை பௌத்த சமய மரபின் மிச்ச சொச்சங்கள் ஆகும்.

## நெருப்பும் புகையும் இணைந்த ஓமகுண்டம்

தமிழகத்தில் ஆலங்குச்சி, அரசங்குச்சி, இச்சிக் குச்சி ஆகிய மூன்றையும் கொண்டு ஹோமம் வளர்ப்பதுண்டு. அது போல ஜப்பானில் மரத் திப்பிகளைக் கொண்டு தீ வளர்த்து அச்சூழ்நிலையைத் தூய்மையாக்குவர். இச் சடங்கை ஜப்பானில் **கோமா ஜி** *[Goma-ji]* என்று அழைப்பர். மனித ஆசைகளின் எதிர்மறை விளைவுகளை சமன் செய்து நன்மையை உருவாக்க ஓமம் வளர்க்கின்றனர்.



அண்மையில் இணைய தளத்தின் மீதான ஆர்வத்தால் இளைஞர்கள் தடம் மாறிப் போவதற்கு மாற்று வழி வேண்டி ஓமம் வளர்த்து தூய்மைப்படுத்தும் சடங்கை இணையத்தில் நடத்தினர். **கொகுஜோ ஜி** என்ற பழமையான கோவிலில் இச்சடங்கு நடந்தது. இதற்கு வரவழைக்கப்பட்ட மரத் திப்பிகள் **நதேகி** [nadegi] எனப்பட்டன. இணையத்தின் வழியாகப் பலரும் இந்த ஹோமத்தில் பங்கு பெற்றனர். மூலிகைக் குச்சிகளைக் கொண்டு நெருப்பு வளர்த்து புகை உருவாக்கினால் சுற்றுப்புறம் சுத்தமாகும் என்ற நம்பிக்கை இன்றும் ஜப்பானில் இருந்து வருவதற்கு இந்தச் சடங்கு ஒரு சான்றாகும்.

இந்தோனேசியா, மலேசியா, சிங்கப்பூர், கம்போடியா ஆகிய நாடுகளிலும் பௌத்தம் செழித்து வளர்ந்திருப்பதால் புத்த விகாரைகளில் மிகப்பெரிய நீண்ட அடர்த்தியான அகர் பத்திகளைத் தினந்தோறும் புகைக்கின்றனர்.

### எண்ணெய்த் துணியைச் சுற்றித் தீக்குளித்தல்

கிறிஸ்தவ யூத சமயங்களில் ஞானஸ்நானம் என்ற பெயரில் நீரினால் திருமுழுக்குச் செய்து தூய்மைப்படுத்துவர். ஆனால் பௌத்தம் நீரை விட நெருப்புக்கே அதிக முக்கியத்துவம்

அளித்தது. புத்தர் நிலையை அடைவதற்காக மாமன்னன் அசோகன் தனது உடம்பில் எண்ணெய்த் துணியைச் சுற்றிக்கொண்டு தீ வைத்து உயிர் நீத்தான்.

புத்த கசபா என்பவர் புத்தருக்காக தீக் குளித்தார். அப்போது அந்த இடத்தில் ஒரு தாமரை மொட்டு மலர்ந்தது. ஒருவர் துய்மையாக்கச் சடங்காக தீ குளித்துச் சாகும் போது வானில் நன்னிமித்தங்கள் தோன்றும். பூமிக்கு ஒரு புத்தர் கிடைக்கப் போகிறார் என்பதால் இத்தகைய நன்னிமித்தங்கள் தோன்றுகின்றன. புத்த கசபாவும் தனது உடம்பில் எண்ணெய்த் துணியைச் சுற்றிக் கொண்டு தீ வைத்து விளக்கு போல எரிந்து சாம்பலானார்.

"அன்பே தகழியாக ஆர்வமே நெய்யாக,

இன்புருகு சிந்தை இடுதிரியாக"

என்று ஆழ்வார் பாடிய பாடல்களுக்கு முன்னோடி பௌத்த சமயத்தின் தீ குளித்தல் சடங்கு எனலாம். [விசுவாமித்திரர் பிரம்மரிஷி பட்டம் பெறுவதற்காக தனது உடலைத் திரியாக்கி எரித்தார் என்பதும் இத்துடன் ஒப்பு நோக்கத்தக்கதாகும்].

## பிறருக்காக தீ குளித்தல்

*பௌத்தர்களில் சிலர் தனக்காகவும் மன்னனுக்காகவும் இவ்வாறு தீயில் உடம்பை அர்ப்பணித்து உயிர் நீத்தனர். தீயினால் உடம்பைச் சுத்தப்படுத்திச் சொர்க்கம் புகலாம் என்ற சமய நம்பிக்கையைப் பௌத்த சமயம் ஆழமாக விதைத்தது. இதனால் துறவிகள் தூய்மைக்காக தீக் குளித்து இறந்தனர். தீக் குளித்து இறந்தால் புத்தர் நிலை அடையலாம் என்ற நம்பிக்கையில் இறந்த அசோக மன்னனுக்காக வேறு சிலர் தீக் குளித்தனர். [இதன் தொடர்ச்சியாகவே இன்றைக்கும் தம் அரசியல் தலைவர்களுக்காக சில தொண்டர்கள் தீ குளிக்கின்றனர்]. போதிசத்துவர் நிலை அடைந்தவரும் கூட தமது மன்னருக்காக தமது*



*பௌத்த சமயம் அவர் ஆதரவில் செழிக்க வேண்டும் என்பதற்காகவும் தீ குளித்தனர்.*

**தாமரை சூத்திரம்**

*பௌத்தர்களில் தீ குளித்து உயிர் நீப்போர் தனது மனோதிடத்துக்காக அச்சமயத்தில் தாமரை சூத்திரம் சொல்லிக்கொண்டே இருப்பர். புத்தர் நிலை அடைந்தவரின் முன்பு அல்லது புத்த ஸ்தூபியின் முன்பு தனது கை கால் அல்லது ஒரு சிறு விரலையாவது அர்ப்பணிக்க வேண்டும் என்பது சமய நம்பிக்கை. [கணியான் கூத்தில் நடக்கும் கை வெட்டு, கால் வெட்டுச் சடங்குகளும் இத்துடன் தொடர்பு கொண்டவை].*

*தீ குளித்து இறந்தால் துஷிதா என்ற சொர்க்கத்தில் மீண்டும் பிறப்பார்கள் என்றும் ஒரு நம்பிக்கை இருந்தது. தீக்குளித்து இறந்து புத்தர் நிலை எய்தப் பெற்றதும் அவர்கள் ஒளி உடம்பைப் பெறுவர். சைவ வைணவ ஆதிக்கத்துக்குப் பிறகு பல போதிசத்துவர்கள் சித்தர்கள் என்ற பெயரில் மலைக் குகைகளில் மறைந்து வாழ்ந்தனர். அவர்கள் ஒளியுடம்பு பெறுதல் குறித்து பரிபாஷையில் பாடி வைத்துள்ளனர். அகத்தியர் பரம்பரையில் வந்த பல சித்தர்கள்* **போதி இல்** *எனப்பட்ட பொதிகை மலையில் வாழ்ந்தனர்.*

*அகத்தியர் என்பவர் ஓர் அவலோகதீஸ்வரர். அவர் பொதிகை மலை எனப்படும் குற்றாலத்தில் வாழ்ந்தார் என்பவை ஆசியவியல் ஆய்வியல் நிறுவனத்தின் இயக்குனர் முனைவர் ஜி. ஜான் சாமுவேல் நடத்திய ஆராய்ச்சிகளில் உறுதியாகி உள்ளது.*

**பொது நலத்துக்காக தீ குளித்தல்**

*திபெத் நாட்டின் பௌத்த சமயத்தில் தீ குளிக்கும் வழக்கம் இருந்ததில்லை. ஆனால் இப்போது சீனாவின் ஆதிக்கம் அதிகரித்து விட்ட நிலையில் அதன் கொடுமைகளில் இருந்து தப்பிக்க விரும்பிய 121 இளைஞர்கள் இதுவரை தாய் நாட்டின் நலம் வேண்டி தீக்குளித்துள்ளனர்.*

*சீனாவில் தீக்குளித்தல் சகஜம். அங்கு பௌத்தத்தில் துறவு மேற்கொண்டிருந்த பல்லாயிரம் பேர் தன்னைத் தானே எரித்துக் கொண்டு சாம்பலாகியதுண்டு. இதற்குப் பெயர் சுய தியாகம் அல்லது* ***உடம்பைத் துறத்தல்*** *என்பதாகும். இவ்வாறு உயிர் துறத்தல் திபெத்தில் புதிய நடைமுறை ஆகும்.*

*முதலில் ஒரு இளம் புத்த பிட்சு மண்ணெண்ணெயை ஊற்றிக் கொண்டு தீக்குளித்தார். இதைத் தொடர்ந்து இது வரை 121 பேர் தீ வைத்துக் கொண்டு இறந்து*

போயினர். இதனால் தம் நாட்டுக்கு சீனர்களிடம் இருந்து விடுதலை கிடைக்கும் என்று நம்புகின்றனர்.

## தீ மெழுகுதல்

இந்தியாவில் தமிழ் நாட்டில் தலையில் தீக் கங்குகளை வாரிக் கொட்டும் வழக்கம் முஸ்லிம்களிடம் காணப்படுகிறது. மதுரையின் அருகே திருப்பரங்குன்ற மலையில் உள்ள சிக்கந்தர் பள்ளிவாசலில் இப்பழக்கம் இருந்தது. இதைத் தீ மெழுகுதல் என்பர். தலையின் மீது ஒரு துணியை போட்டுக்கொண்ட பிறகு இரும்புக் கரண்டியால் தீக் கங்குகளை அள்ளி நேர்த்திக் கடன் நிறைவேற்றுவோரின் தலையில் கொட்டுவர் என்று அர்ஷியா தனது நாவலில் குறிப்பிடுகிறார். திருச்சி, தஞ்சை மாவட்டங்களிலும் சில இடங்களில் இது போன்ற நேர்ச்சைகள் இருந்தன.

பௌத்த சமயம் பரவியிருந்த அனைத்து நாடுகளிலும் தீ குளித்து புத்தர் நிலை எய்தும் வழக்கம் காணப்பட்டது. இதனை *Burning for Buddha* என்ற நூலில் ஜேம்ஸ் ஏ பென் அன்பவர் விளக்கியுள்ளார். பொதுவாகக் கீழை நாடுகளில் நீர் தூய்மையாக்கும் என்ற சமய மரபை மறுத்து நெருப்பு மட்டுமே தூய்மையாக்கும் என்ற

கருத்தை பௌத்த சமய மரபு தீவிரமாகப் பரப்பியது. மகாயானா பௌத்தம் என்ற பெரு நெறியும் தீ குளித்தலை ஆதரித்தது.

**அனல் வாதம், புனல் வாதம்**

சைவ வைணவ சமயங்களின் ஆதிக்கத்தின் போது சைவ சமயக் குரவர் அவைதீகச் சமயத்தைச் சேர்ந்த சமணர்கள் மற்றும் சாக்கியர்களை அமண் குண்டர் என்றே குறிப்பிட்டனர். பௌத்தர்கள் வலிமை என கருதிய உடல் சார்ந்த சுரப்புகளை எல்லாம் இழித்துப் பேசி வசைச் சொற்கள் ஆக்கினர். பௌத்தர் மற்றும் சமணர்களை வாதுக்கு அழைத்து அவர்களின் ஏடுகளை நீரில் இட்டும் நெருப்பில் இட்டும் அனல் வாதம், புனல் வாதம் என்ற பெயரில் சோதித்தனர். அப்போது மெல்ல மெல்ல சமணமும் பௌத்தமும் இங்கிருந்து விடைபெற்றுக் கொண்டன.

போதி சத்துவர்கள் மடங்களை அமைத்து புடமிடுதல், மூட்டம் போடுதல் போன்றவற்றை சீனா, ஜப்பான் போன்ற நாடுகளில் பரப்பினர். பௌத்தம் செழித்திருந்த காலத்தில் தமிழகத்தில் போதி சத்துவர்கள் குரு பரம்பரை முறையில் மடங்கள் அமைத்து கலைகளை வளர்த்தனர். இன்றும் பல நாடுகளில் சித்த மருத்துவம், தியானம், யோகப் பயிற்சி,

சோதிடம், மாந்திரீகம் போன்றவை இந்த மடங்களில் பாதுகாப்பாக உள்ளன. பக்தி இயக்கக் காலத்தில் பௌத்த பள்ளிகளையும் துறவிகள் வாழ்ந்த மடங்களையும் சைவமும் வைணவமும் அபகரித்துக் கொண்டன.

**தீப் பாய்தல்**

சொர்க்கம் புகலாம், புத்தர் நிலை அடையலாம் என்றிருந்த தீ குளித்தல் சடங்கு மன்னனுக்காகவும் தீ குளிக்கலாம் என வளர்ந்து கடைசியில் கணவனுக்காக தீ குளிப்பதும் நல்லது என்ற நிலையை அடைந்தது. மதுரையில் பாண்டியனின் செங்கோல் வளைந்து வெண் கொற்றக்குடை வீழ்ந்து அவன் உயிர் இழந்த போது



“கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்” என்று சொன்ன பாண்டிமாதேவி நின்ற இடத்திலேயே விழுந்து உயிரிழந்தாள்.

பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு ‘பல் சான்றீரே பல் சான்றீரே’ என்ற பாடலை எழுதி வைத்து விட்டு தீயில் பாய்ந்து மாண்டாள். இந்தியாவில் பௌத்தம் செழித்து வளர்ந்த ஒரிசா, வங்காளம், பீஹார், தமிழ்நாடு போன்ற மாநிலங்களில் சதி அல்லது உடன்கட்டை ஏறும் வழக்கம் நிலை பெற்றது. பௌத்த சமயப் பெண்ணான கண்ணகியும் ஒழுக்கம் பிறழ்ந்து இருந்த மதுரை மாநகரைத் தூய்மைப்படுத்தும் நோக்கில் தீக்கு இரையாக்கினாள்.

### சமாதி ராஜ சூத்திரம்

தீயிட்டுத் தன்னைக் கொளுத்திக்கொள்ள விரும்பாத சில புத்த துறவிகள் மண்ணில் புதைந்து ஜீவ சமாதி அடைவதும் உண்டு. அப்போது அவர்கள் சமாதி ராஜ சூத்திரத்தைச் சொல்லிக்கொண்டே இருப்பர். இத்தகைய உயிர்த் தியாகத்தில் வலி எதுவும் கிடையாது, பேரின்பமே கிட்டும் என்றும் கருதுகின்றனர். இதை கருணை என்ற கருத்தில் புரிந்து கொள்ள வேண்டும் என்று பௌத்தம் வலியுறுத்துகிறது.

**சுய சமாதி நிலை**

தானே தன் உடம்பை பதப்படுத்தி தூய்மையாக்கி வைப்பதை ஜப்பானில் *sokushin butsu* சொகுஷின்புத்சு என்பர். இந்த முறையை ஆயிரக் கணக்கானோர் முயன்றும் இருபத்து நான்கு பேர் மட்டுமே அடைய முடிந்தது. எந்த வித வெளி உள் மருந்தும் பூச்சும் இன்றி உடம்பு பதப்படுத்தப்பட்டது போல அழியாமல் துர்நாற்றம் வராமல் அப்படியே இருக்கிறது.



ஸ்ரீரங்கத்தில் இராமானுஜர் உடம்பும் இத்தகைய தூய நிலையை அடைந்தது. இது ஒரு வகையான ஜீவ சமாதி. திருமூலர் உடம்பால் அழியின் உயிரால் அழிந்தார்' என்றார்.

**உறுப்புகளைப் பலியிடுதல்**

பேரின்ப நிலை அடைய விரும்பிய சிலர் கை, கால், தலை போன்ற உறுப்புகளை வெட்டித் தருவதுமுண்டு. வேறு சிலர் தம் குழந்தைகளைப் பலியிடுவதும் உண்டு. இவை அனைத்தும் தன் ஆன்மா உயர் நிலையை அடைய வேண்டும், சொர்க்கம் புக வேண்டும் என்ற எண்ணத்தினால் அல்லது தம் மன்னன் வெற்றி பெற வேண்டும் பௌத்தம் மன்னனின் ஆதரவால் இம்மண்ணில் செழிக்க வேண்டும் என்ற கொள்கையினால் செய்யப்பட்டன. பிற்காலத்தில் தமிழ்நாட்டில் இராஜ ராஜ சோழனுக்காக நவகண்டம் அளித்தது கூட இச்சடங்கின் தொடர்ச்சி தான் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.



# *4. இந்திரன்-தாய்ஷகோ தென் வழிபாடு*

*தமிழ்நாட்டில் இருந்து ஜப்பானுக்குச் சென்ற பௌத்த சமயம் இங்கிருந்து இந்திரன், காமாட்சி, சப்த கன்னி, பிரம்மா, விநாயகர் போன்றோர் வழிபாடுகளையும் கொண்டு சென்றது. ரிக் வேதத்தில் 25% இடம்பெற்றிருந்த இந்திரன் பௌத்த சமயத்தில் தேவர்களின் தலைவனாக தேவராஜா என்றும்* ***'தேவானாம் இந்திரா'*** *என்றும் போற்றப்பட்டான். பௌத்தம் தோன்றிப் பரவிய போது அதுவரை மக்களிடம் இருந்து வந்த நாட்டுப்புறத் தெய்வங்களின் வழிபாட்டை ஏதேனும் ஓர் உருவில் தனதாக்கிக் கொண்டது.*

*பௌத்த சமயத்தில் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்த இந்திரன் ஜப்பான் மொழியில்* ***தாய்ஷகோ தென்*** *என்று அழைக்கப்பட்டான். பிரம்மா* ***பொன்தென்*** *எனப்பட்டான். எமன்* ***என்ம தென்*** *என்று அழைக்கப்பட்டான். கௌதம புத்தருக்கு இருபுறமும் இந்திரனும் பிரம்மாவும் இடம்பெற்றனர்.*



## இந்திராணியைக் கைப்பற்றுதல்

இந்திராணி இருக்கும் இடமே இந்திர லோகம் எனப்பட்டது. அங்கு இந்திராணி கூட இருப்பவன் தான் இந்திரன். இவளைக் கைப்பற்றுவது ஓர் இனத்தைக் கைப்பற்றுவதற்கு சமம். எனவே அயோமுகி தன் அண்ணன் பத்மாசுரனுக்காக இந்திராணியை இழுத்துச் செல்ல முனைந்தாள். இது ஓர் இனப் போராட்டத்தின் கதை. இந்திராணிக்குக் காவலாக இருப்பவன் மகா காலன். இவன் பௌத்த தெய்வங்களில் முக்கியமானவன். இவன் இந்திராணியைக் காப்பாற்ற அயோமுகியின் கையை வெட்டிவிடுகிறான்.

இந்திராணி தங்களின் குல விளக்கு; மூதாய்; தாய்த் தெய்வம் எனக் கருதியதால் அவளைக் காப்பாற்றுவது மகா காலனின் கடமை. இந்திராணி மூங்கில் காட்டில் புகுந்து மறைந்து வாழ்ந்ததாக கந்தபுராணம் கதை



இந்திராணி தெய்வம்

கூறுகிறது. இந்திராணி ஓடி ஒளிந்ததால் அடுத்து குழந்தை பெறும் தகுதியையும், வாய்ப்பையும் அவள் மகள் தேவயானை பெறுகிறாள். அவளுக்கு அவ்வாய்ப்பு முருகனால் அளிக்கப்படுகிறது.

ஆணின் பாலியல் திறன் மிகுதியை உணர்த்த யானையை வினாயகனுக்கும் இந்திரனுக்கும் குறியீடு ஆக்கியது போலவே பெண்ணாகிய இந்திராணியின் மகளுக்கும் யானையே குறியீட்டுப் பெயர் ஆகிறது. அதனால் இவள் தேவ யானை, குஞ்சரி என்று

அழைக்கப்படுகிறாள். இக் கந்த புராணத்தில் மூதாயின் [பெண்ணின்] முக்கியத்துவம் குறைக்கப்பட்டு, மகன் அதாவது இளங்குமரன் என்ற ஆண் முக்கியத்துவம் பெறுகிறான். இதுவும் பண்பாட்டு மாற்றத்தை பதிவு செய்யும் வழக்காறு ஆகும். [இம்மாற்றம் ஐரோப்பிய நாடுகளிலும் மதங்களிலும் நடை பெற்றுள்ளது].

## உலகின் மிகப் பழைய இந்திரன்

ஆப்கானிஸ்தானில் 1833 முதல் 1838 வரை நடந்த அகழ்வாராய்ச்சியில் கிடைக்கப்பெற்ற மிகப்பழைய தங்கப் பேழை ஒன்றில் இந்திரன்



*பிரம்மா ஆகியோருக்கு நடுவே காணப்படும் புத்தரின் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இப் பேழை தங்கத்தால் செய்யப்பட்டு அதில் நவரத்தினங்கள் பதிக்கப்பட்டுள்ளன. இது பொது ஆண்டு அறுபதைச் சேர்ந்ததாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. ஆப்கானிஸ்தானுக்கு அருகே உள்ள ஜலாலாபாத் என்ற ஊருக்கு 11 கிலோமீட்டர் தொலைவில் பீமராங் என்ற இடத்தில் இரண்டாவது ஸ்தூபியின் கீழ் இப்பேழை அகழ்ந்தெடுக்கப்பட்டதால் இந்தப் பெட்டியை* ***பீமராங் தங்கப் பெட்டி*** *என்கின்றனர்.*

### இந்திரனின் தோற்றம்

*இந்திரன் என்பவன் இந்திராணி என்ற மூதாய்க்கு விந்து தானம் செய்கின்றவனாக ஆற்றல்மிகு தனியனாகக் கருதப்பட்டான். எகிப்தில் இருந்த* ***கோடேஷு****க்கு [a male prostitute and the Holy of the Holies] நிகரானவன். இந்திராணி மாறுவதில்லை. ஆனால் இந்திரர்கள் மாறுவார்கள் என்பது புராணக் கதை.*

*இந்திராணி என்பவள் தாய் முதன்மை சமுதாயத்தில் அதிகாரம் மிக்க தாயாக போற்றப்பட்டாள். மூதாய் என்பவள் ராணித்தேனீ போன்றவள். அவளுடைய முக்கியப் பணி ஆரோக்கியமான குழந்தைகளைப் பெற்றுத்*

தருவதாகும். அதற்கு உதவக் கூடியவர்கள் இந்திரிய தானம் செய்பவர்கள் என்ற பொருளில் இந்திரன் என்று அழைக்கப்பட்டனர். காலப்போக்கில் இக்கருத்து அவன் அதிகார மிக்க ஒருவனாகவும் அவனிடம் இந்திரிய தானம் பெற்ற பெண்கள் ஆயிரம் பேர் என மாறிவிட்டது. எனவே இவன் ஆயிரம் யோனியன் எனப்பட்டான்.

இந்திரியத்தின் நிறமான வெள்ளை நிறத்தை உருவகமாகக் கொண்டு இந்திரனுடைய யானை வெள்ளை நிறம் என்று குறிப்பிடப்பட்டது.



*யானையின் பெயரும் அவனுடைய பெயரால் ஐராவதம் எனப்பட்டது. பௌத்தம் உருவாவதற்கு முன்பு பெண் முதன்மை சமுதாயத்தில் இறுதியில் தாய்மையை அளிக்கக்கூடிய ஆண்கள் வல்லமை படைத்தவர்களாக கருதப்படும் நிலை தோன்றியது. அப்போது அது தொடர்பான குறியீடுகளைக் கொண்டே அவர்கள் குறிப்பிடப்பட்டனர்.*

*ஆணின் வீரியத்தைக் குறிக்கும் வகையில் விநாயகர் ஒற்றைக் கொம்பன் [phallic symbol] என்றும் இந்திரன் வெள்ளை நிறத்தவன் என்றும் அழைக்கப்பட்டனர். அடுத்துத் தோன்றிய பௌத்த சமயத்திலும் இக்கோட்பாடு [இந்திரனின் பெருமை] தக்கவைக்கப்பட்டது. அவன் ஆயிரம் யோனிக்கு உரியவனாக புகழப்பட்டான். பின்னர் பௌத்தம் மறைந்து வைதீக சமயங்கள் செல்வாக்குப் பெறத் தொடங்கிய போது இந்திரன் ஆயிரம் யோனி சாபம் பெற்றவனாகக் கதைகள் உருவாக்கப் பட்டன. சாப விமோசனம் மூலமாக அவை மற்றவர்களுக்குக் கண்களாகத் தோன்றும் என்று தல புராணங்கள் இயற்றப்பட்டன.*

### ***இந்திரன் கோவில், சிவன் கோவிலாயிற்று***

*புத்த கோவில்களில் பீடத்தில் ஆவுடையாருடன் கூடிய பாணம் இந்திரனின்*

*ஆண்மையின் அடையாளமாக அவனுக்கு எழுப்பப்பட்ட கோவில்களில் வைக்கப்பட்டிருந்தது. அது போல தாரா தேவி அல்லது காமாட்சி கோவில்களில் ஆவுடை மட்டும் இடம் பெற்றது. பின்னர் சைவ சமயம் செல்வாக்குப் பெற்றபோது இந்திர பாணம் சிவலிங்கம் என்ற பெயரில் அழைக்கப்பட்டது.*

*வைதீகச் சமயங்களில் இந்திரன் தேவ ராஜாவாகப் போற்றப்பட்டாலும், அவனைச் சுற்றி அறுபதினாயிரம் அரம்பையர் இருந்தனர். அவனை போகியாகவும், ரோகியாகவும், இந்து மதம் உருமாற்றி விட்டது. சமண சமயத்தில் இந்திரனின் செல்வாக்கு நிலைத்திருந்தது. ஆனால் சைவம், வைணவம் வந்த பிறகு இந்திரன் சபிக்கப்பட்டவனானான்.*

### இந்து மதத்தின் சபிக்கப்பட்ட இந்திரன்

*இந்திரனுக்கு எழுப்பப்பட்ட அனைத்து கோவில்களையும் பௌத்தர்கள் மருத்துவ மனைகளாகவும் பயன்படுத்தி வந்தனர். அவை பௌத்த சமயப் பள்ளிகளாக, சமய ஆராய்ச்சிக் கூடங்களாக, மருத்துவ ஆராய்ச்சி மையங்களாக இருந்தன. இவற்றைப் பின்னர் வந்த வைதீக சமயங்கள் இந்திரன் சபிக்கப்பட்டவன் என்றும், அவன் சாப விமோசனம் பெற்ற*

*இடங்களே இவை என்றும் கதை கட்டிவிட்டன.*

*இந்திரனின் குறியீட்டு வடிவத்தை சிவலிங்கம் என்ற பெயரில் வழிபடு பொருளாக மாற்றி விட்டன. காஞ்சி நகரில் இருக்கும் தேவராஜா கோவிலும் ஆரம்பத்தில் இந்திரனின் கோவிலாகவே இருந்தது.*

### ***கௌதம புத்தரும் இந்திரனும்***

*இந்திரன் பௌத்தத்தில் பெரும் போற்றுதலுக்கு உரியவனாக இருந்தான். அசோகரின் 'புத்த சரிதம்' தேவலோகத்தை ஆளும் 'சக்கர' என்றும் 'சக்கா' என்றும் இந்திரனை அழைத்தது. சீன நாட்டில் பௌத்தர்கள் இந்திரனை 'சாக்கியமுனி' என்றே அழைத்தனர். இந்திரன் எனப்படும் சாக்கியமுனி புத்தர் குழந்தையாய் இருந்த போது அவருக்கு 'திருமுழுக்கு' [first bath] செய்வித்தார். இதனால் கௌதம புத்தருக்கும் மூத்த முனிவராக இந்திரன் கருதப்பட்டது தெளிவாகிறது.*

### ***இந்து சமயத்தில் இந்திரனின் குடும்பம்***

*இந்து சமயத்தில் இந்திரனை 'போக விரும்பி' என்று சித்தரிக்கின்றனர். அவனுக்கு சித்ரகுப்தன், ஜெயந்தன் என்ற 2 மகன்களும்*



ஜெயந்தி தேவசேனா என்ற 2 மகள்களும் உண்டு. ஜெயந்தி சுக்கிரனையும், தேவசேனா முருகனையும் திருமணம் செய்தனர்.

இந்திரனின் மனைவியான இந்திராணி பூலோமன் என்ற அசுரனின் மகள். எனவே அவள் பூலோமஜா என்று அழைக்கப்பட்டாள். இந்த அசுரனைக் கொன்று இந்திரன் இந்திராணியை மணந்தான். மேலும் இவள் ஏழு மாத்ரிகாக்களில் [தாய் தெய்வங்களில்] ஒருத்தியாகக் கருதப்பட்டாள். ஏழு தாய் என்பவர்கள் சப்தகன்னியர் ஆவர். சப்தகன்னியர் வழிபாடு பௌத்த சமயத்தில் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தது.

இந்திரனுக்கும் காமதேனுக்கும் பிறந்தவன் சித்ரகுப்தன். இவன் சித்ரா பவுர்ணமி அன்று



சித்திரகுப்தன் சிலை

பிறந்தவன் ஆவான். இவன் எமனிடம் தலைமைக் கணக்கராக இருந்து பிறவி முடிந்த ஜீவன்கள் உலகில் செய்த நன்மை, தீமைகளை கணக்கிடும் உரிமை பெற்றவன். பௌத்தர்களின் முக்கிய நகரமாக விளங்கிய சித்ரகுப்தனுக்கு நெல்லுகர தெருவில் பேர் கோவில் உண்டு. இங்கு சித்ரகுப்தனின் சிலை ஒரு கையில் பனை ஓலைச் சுவடியையும், மறு கையில் எழுத்தாணியையும் கொண்டு

அமைக்கப்பட்டுள்ளது. இங்கு சித்ரா பௌர்ணமி அன்று சிறப்பு வழிபாடுகள் நடக்கும். மாலை கருணாம்பிகை என்ற தேவியுடன் சித்ரகுப்தனுக்கு திருக்கல்யாண வைபவம் நடக்கும்.

## கேரளாவில் பௌத்த சமயமும் இந்திரனும்

கேரளாவும் இலங்கையைப் போல ஒரு காலத்தில் பௌத்த சமயம் செல்வாக்கு பெற்றிருந்த பகுதியாகும். அங்கு இந்திரனின் பெயர் இன்றளவும் மக்கட் பெயர்களில் இருந்து வருவதைக் காணலாம். பின்னர் அங்கும் சைவ சமயச் செல்வாக்கு வளர்ந்த போது பெயர்களும் சிறிது மாறத் தொடங்கின. அங்குப் பரவலாகக் காணப்படும் சுரேந்திரன் என்பது கடவுளரின் தலைவனைக் குறித்தது; இது பின்பு சுரேஷ் என்று மாறியது. சுரேஷ் என்றால் கடவுளரின் தலைவனான ஈசன்; ஈஸ்வரன் என்று வழங்கலாயிற்று. சைலேந்திரன் என்றால் மலைகளின் தலைவன் என்பது பொருள். இப்பெயர் சைலேஷ் - மலைகளின் ஈசன் என்ற பொருளில் இப்போது ஆட்களுக்கு சூட்டப்படுகிறது.

## பௌத்தத்தை அழித்த பரசுராமனின் கதை

கேரளாவில் இந்திரனைப் பெண் பித்தன் என்று நம்ப வைப்பதற்காக அகலிகை கதை

உருவானது. அகலிகையை நிறையழித்த இந்திரன் பூனை வடிவெடுத்து ஓடி மறைந்தான். இவ்வாறு இந்திரனைக் குறித்து இழிவான கதைகளைப் பரப்பி இந்திர வழிபாட்டை அப்புறப்படுத்தினர். இதனால் கேரளத்தில் பௌத்தம் அழிந்து சைவ, வைணவ சமயங்கள் தலைதூக்கின. வழிபடும் தெய்வங்கள் மாறினாலும், அவர்களின் பண்பாடும் பழக்க வழக்கங்களும் பௌத்த சமயத்தைப் பின்பற்றியே இருக்கின்றன.

**மருத நிலத்தலைவன் வேந்தன் அல்லது இந்திரன்**

சங்க இலக்கியத்திற்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியம் ஆறுகள் நிறைந்த மருத நிலப்பகுதிக்குத் தலைவனாக வேந்தன் அல்லது இந்திரனைக் குறிக்கின்றது. ஆற்றுப் பாசனத்தில் நெல் விளைச்சலில் ஈடுபட்டுள்ள மருத நிலத்தைச் சேர்ந்த மள்ளர் (பள்ளர்) எனப்படுவோர் தங்களைத் தேவேந்திர குல வேளாளர் என்று அழைக்கின்றனர். இவர்கள் இந்திரனின் வாரிசுகளாக கருதப்படுகின்றனர். சேற்றுக் கால் செல்வர் எனப்படும் மருத நிலத்து மள்ளர்கள் நெல் வேளாண்மையை தமது முதன்மைத் தொழிலாகவும், முக்கிய தொழிலாகவும் கொண்டவர்கள். இவர்கள்

இன்றும் தேவேந்திரனோடு தம்மை தொடர்புப்படுத்தி பெருமை அடைகின்றனர்.

## இந்தியாவில் இந்திரனின் விழா

தமிழகத்தில் சிலம்பும் மணிமேகலையும் இந்திரவிழா பற்றிச் சிறப்பாக எடுத்துக் கூறுகின்றன. இந்திரவிழா வடநாட்டில் ஹோலி என்ற பெயரில் பங்குனி பௌர்ணமி அன்று கொண்டாடப்படுகிறது. அன்று அங்கு நீர் விளையாட்டு நடத்துவர். பிற்காலத் தமிழகத்தில் இந்திர விழா பங்குனி பவுர்ணமி அன்று காமன் பண்டிகை அல்லது காமன் விழாவாகக் கொண்டாடப்பட்டது. அவ்விழாவன்று ஆணும் பெண்ணும் ஆற்றங்கரையிலும், கடற்கரையிலும் கூடி நிலவொளியில் ஆடிப்பாடி மகிழ்வர்.

இந்திர விழாவைத் தீவகச் சாந்தி விழா என்று அழைத்தனர். தீவகச் சாந்தி என்பது



பெண்ணை சாந்தி செய்யும் திருநாள் ஆகும். இந்நினைவைப் போற்றும் வகையில் கோவில்களில் தெய்வீகத் திருமணங்கள் யாவும் பங்குனி உத்திரம் அல்லது பங்குனி முழுநிலவு நாளன்று தமிழகம் முழுவதும் நடைபெறுகின்றன. சாஸ்தா புஷ்கலா பூரணி திருமணம்; முருகன் தெய்வானை திருமணம்; சிவன் பார்வதி திருமணம் ஆகிய அனைத்தும் பங்குனி உத்தரத்தன்று நடைபெறுவது வழக்கம். திருமலை நாயக்கர் காலத்தில் மதுரையில் மட்டும் மீனாட்சி சொக்கர் திருமணம் சித்ரா பவுர்ணமியுடன் இணைக்கப்பட்டது.

**காமன் பண்டிகை**

பங்குனி உத்தரத்தன்று அல்லது பங்குனி முழு நிலா நாளன்று இந்திர விழா கொண்டாடப்பட்டு வந்த நாட்களில் காதலுக்கும் காமத்திற்கும் பெருமதிப்பு அளிக்கப்பட்டது. பழங்காலத்தில் முழு நிலவில் உறையூரிலும், திருவரங்கத்திலும், காவிரி ஆற்றின் இடையே இருந்த மணல் திட்டுகளில் ஆடவரும் மகளிரும் தத்தமக்கு விருப்பமான இணைகளுடன் கூடி மகிழ்ந்தனர். பின்னர் அதே நாள் சிவன் காமனை [மன்மதன்] எரித்த நாள் என்று அவ்விழாவின் காரணம் மாற்றப்பட்டது. சிவன்

தன் தவத்தைக் கலைத்த காமனை நெற்றிக்கண்ணால் சுட்டெரித்தார் என்று இந்நாளில் காமன் பண்டிகை காரணம் கூறப்பட்டது.

பௌத்தத்தில்; சகஜபாவம் என்பது ஆண்-பெண் உறவை மேன்மைப்படுத்திப் பாடியது. இப்பாடல்கள் பெண்ணின் பெருமை கூறுவனவாக இருந்தன; அல்லது பெண்ணின் இன்றியமையாமையை எடுத்துரைத்தன.

காமன் பண்டிகையில் இருதரப்பினர் மாற்றி மாற்றி ஒருவர் கேட்கும் கேள்விக்கு மற்றொருவர் பதில் அளிப்பதாக இப்பாடல்கள் அமைந்து போட்டி பாடல் போன்ற ஒரு தோற்றத்தைக் கொடுத்தன. காமன் பண்டிகை கேட்கவரும் மக்கள் இதனை வெகுவாக ரசித்தனர். தமிழகத்தில் காமன் பண்டிகை திமுக ஆட்சிக் காலத்திற்கு முன்புவரை அதிக அளவில் நடைபெற்று வந்தது. பின்னர் அருகி விட்டதைக் காண்கிறோம்.

இந்திரனையும் ஆண்-பெண் உறவையும் மதித்து போற்றிய காலத்தில் பௌத்தத்தின் சகஜ பாவப் பாடல்களும் ஆட்டங்களும் போற்றுதலுக்கு உரியனவாகத் திகழ்ந்தன. இவை இம்மண்ணின் கலைகளாக இருந்த நிலை மாறிப் போய் கோவில் கலைகளில்

இருந்து மெல்லப் பிரிந்து வந்துவிட்டன. பிறகு நாட்டுப்புற ஆட்ட வகைகளில் ராஜா ராணி ஆட்டத்தில் மட்டும் பெண்ணின் இன்றியமையாமை பற்றிய சகஜ பாவப் பாடல்கள் இடம் பெற்றன. இப்போது ராஜா ராணி ஆட்டம் என்பது பெண்களைக் கேலி செய்யும் கருத்துக்களையே பெரும்பாலும் தம் பாடல்களில் வெளிப்படுத்துகின்றன. ஆயினும் அவை பெண் தெய்வங்களின் பெயர்களை வரிசையாக எடுத்துரைத்து அவற்றின் பெருமைகளை முன்னுரைத்து பின்னர் கேலிக்கூத்தாக்கி விடுகின்றன.

### ஜப்பானில் இந்திரன் - முதன்மைத் தெய்வம்

ஜப்பானில் பௌத்தம் இன்றும் செழிப்பாக இருப்பதால் அங்கு இந்திரனை **தாய்ஷாகுதென்** என்ற பெயரில் முதன்மைத் தெய்வமாகப் போற்றி வணங்குகின்றனர். அங்கு இந்திரன் நான்கு திசை காவலரின் [**ஷிக்கொகுதென்**] காவல் தலைவன் ஆவான். இவர் நடுவிலிருந்து நான்கு திசை காவலரையும் அதிகாரம் செய்வான். தோக்கியோவுக்கு அருகில் **கத்சுஷிகோ** என்னும் இடத்தில் உள்ள புத்த கோவில் இந்திரனுக்குரிய தனிக் கோவில் ஆகும். இக்கோவில் **ஷிபாமாதா தாய்ஷி** என்றும் **தாய்கியோஜி** என்றும் அழைக்கப்படுகின்றது. இக்கோவிலில் இரண்டு வாயில் உள்ளது. இக்கோவில் அதன் மரச் சிற்ப

வேலைப்பாடுகளுக்காகப் புகழ் பெற்ற சுற்றுலாத் தலமாக விளங்குகிறது. எதோ *[Edo]* எனப்படும் மன்னர் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்திலிருந்து இந்திரன் தனிப்பெரும் தெய்வமாக வணங்கப்படுகிறான். இவன் சன்னிதி வாசலின் இருபுறமும் **விருத்தகன், விருபாக்ஷன்** ஆகியோர் நிற்கின்றனர்.

## ஜப்பானில் இந்திரனும் மற்ற காவல் தெய்வங்களும்

ஜப்பானில் காவல் தெய்வங்கள் பன்னிருவரில் முதன்மையானவன் இந்திரன். இவனது பெயர் தாய்ஷாகுதென். நெருப்பை **கா தென்,** எமனை **என்ம தென்,** நிருதியை **ரசெத்சு தென்**, காற்றை **ஃபு தென்,** குபேரனை **இஷானா தென்**, வருணனை **சுயி** தென், பிரம்மாவைப் **பொன் தென்**, பிருத்வியை **ச்சி தென்**, சூரியனை



LORD YAMA



LORD EN MA-TEN

***நித் தென்***, *சந்திரனை* ***கத் தென்*** *என்றும் ஜப்பானில் அழைக்கின்றனர். தென் என்பது ஆண் தெய்வத்தைக் குறிக்கிறது. தெ என்பது தெய்வத்தையும் ன் என்பது ஆண்பாற்பெயர் விகுதி போல இடம்பெறுகிறது. இந்த பன்னிருவருக்கும் தலைமைத் தெய்வமாக இந்திரன் விளங்குகிறான்.*

## ***தமிழகத்தில் இந்திரன் கோவில்கள்***

*தமிழகத்தில் இந்திரனின் கோவில்கள் பின்னர் சிவன் கோவில்களாக மாற்றப்பட்ட போது இந்திரனின் சஹஸ்ர யோனி என்ற தனித்தன்மையை மறைக்க இயலாமல் சகஸ்ர நேத்ர என்றே சிவன் கோவில்களில் உள்ள சிவனை மக்கள் அழைத்தனர். பௌத்தம் செல்வாக்குப் பெற்றிருந்த திருச்சி, தஞ்சை, நாகப்பட்டினம் பகுதிகளில் தாம் வணங்கும் இறைவனுக்கு ஆயிரம் கண்கள் உண்டு என்பதை வலியுறுத்தும் வகையில் பல கோவில்களில் இறைவனின் பெயர் கண்ணாயிரநாதர் என்றோ; கண்ணுடன் தொடர்புடைய வேறு பெயராகவோ இன்றைக்கும் அழைக்கப்படுகிறது. மற்ற ஊர்களில் இத்தகைய பெயர் நிலைப்பாட்டை காண முடியவில்லை.*

வைத்தீஸ்வரன் கோவிலுக்கு ஐந்து கிலோமீட்டர் தொலைவிலிருக்கும் திருக்கண்ணார் கோவில் முன்பு இந்திரனின் கோவிலாக இருந்து பின்னர் சிவன் கோவிலாக மாற்றம் அடைந்திருக்கும். இங்குள்ள விநாயகரின் பெயர் கன்னி விநாயகர் ஆகும். இங்கு முருகன் கோவில் இருக்க வேண்டிய இடத்தில் மூதேவி எனப்படும் ஜேஷ்டா தேவியின் பிந்தைய வடிவமான கஜலட்சுமி சன்னதி அமைந்துள்ளது.

சிவலிங்கத்தின் பாணம் இந்திரனை உணர்த்தும் வகையில் உயரமாகவும், அதில் ஆயிரம் கண்கள் இருப்பதைப் போல நிறைய பள்ளங்களும் கொண்டு இருக்கின்றன. இந்திரனின் கோவில்கள் சிவனின் கோவில்களாக மாற்றப்பட்டாலும் கண்ணாயிரம் என்பது நிலை நிறுத்தப்பட்டதால் இவை கண்களுக்கு சிகிச்சை அளிக்கும் தலங்களாகவும் நிலைபெற்றுவிட்டன. மக்களும் அவ்வாறே நம்பி வருகின்றனர்.

**திருக்காரவாசலில்** கண்ணாயிர நாதர் கோவில் உண்டு. **பனையபுரத்தில்** திருகண்ணமர்ந்த நாயனார் என்றும், ரெட்ட வயலில் கண்ணாயிரம் மூர்த்தி என்றும் சிவன் அழைக்கப்படுகிறார். ரெட்ட வயலில் ஆண்கள் மட்டுமே வழிபடுகின்றனர். **கருங்குழி** என்ற ஊரில்



திருக்காரவாசல் கோவில்

திருக்கண்ணார் என்பது இறைவனின் பெயராகும். இந்திரன் சாபம் நீக்கும் ஐராவதம் என்ற யானை இங்கு சிவன் முன்பு நிறுத்தப்பட்டுள்ளது அதற்குப் பின்னால் நந்தி பிற்சேர்க்கையாகக் காணப்படுகிறது. இதை இந்திரன் சாபம் நீங்கிய தலம் என்றே குறிப்பிடுகின்றனர்.

**திருக்கண்ணக்குடியில்** கண் மருத்துவர்கள் வாழ்ந்த ஊர் என்பதால் இங்கிருக்கும் விநாயகர் நேத்திரம் சயரோக நிவாரண விநாயகர் எனப்படுகின்றார். குறு மா என்றால் வடமொழியில் பூனையை குறிக்கும். இந்திரன் பூனை வடிவெடுத்ததை குறிக்கும் வகையில் அவனுக்கு கோவில் உள்ள ஒரு ஊர் குறுமானக்குடி எனப்படுகிறது. இங்குள்ள

**திருக்கண்ணார் கோவிலில்** ஆண்டவன் கண்ணாயிரநாதர் என்று அழைக்கப்படுகிறார்.

## கண் பெயரில், பெண் தெய்வப் பௌத்தக் கோவில்கள்

**கருவலூரில்** ஆயிரம் கண்ணுடையாள் வழிபடப்படுகிறாள். இது புத்த கோவில்களில் பெண் தெய்வக் கோவில் என்பதை ஆயிரம் கண்ணுடையாள் என்ற சொல் குறிக்கிறது. கண் என்பது காலப்போக்கில் பௌத்த கோவிலைக் குறிக்கும் பொது வழக்காகி விட்டதைக் காண்கிறோம். சமயபுரத்தையும் கண்ணபுரம் என்றும் **கண்ணனூர்** என்றும் அழைப்பதால் இதனைப் புரிந்து கொள்ளலாம். இந்த ஊர் கங்காதீஸ்வரர் வழிபட்ட காமதேனு எழுந்தருளியுள்ள ஊர் ஆகும். காமதேனு என்பது காமத்திற்கு அதிபதியான பெண் கடவுளை குறிக்கும் அடையாளம். இது கருவை விழுங்கி, கன்றினைத் தந்த ஊர் என்று அழைக்கப்படுகிறது.

**திருக்காட்டுப்பள்ளி**யில் நேத்திரபுரீஸ்வரர், காமாட்சி அம்மாள் வழிபடு தெய்வங்களாக உள்ளனர். இவ்விரு தெய்வங்களும் பௌத்த சமயத்தின் தெய்வங்களான இந்திரனையும் காமாட்சியையும் குறிப்பனவாகும்.

**அஞ்சனம் தீட்டும் சிகிச்சை நடைபெற்ற திருத்தலங்கள்**

கண்ணியார் கோவிலில் நேத்ரபாலீஸ்வரரும், நீலோத்பலாம்பிகையும் தெய்வங்களாக உள்ளனர். குண்டையூரில் கண் கொடுத்த பொற்றாமரைக் குளம் உள்ளது. திருக்கச்சூரில் அம்பிகையை அஞ்சனாட்சி



என்ற பெயரில் வணங்கப்படுகின்றனர். இறைவன் மருந்தீஸ்வரர் அல்லது வைத்தியநாதர் எனப்படுகிறார். இப்பெயர்கள் இங்குக் கண்ணுக்கு அஞ்சனம் தீட்டப்பட்ட சிகிச்சை நடைபெற்றதைக் குறிக்கின்றது. இக்கோவிலில் பிரம்மன் சதுர்முக சண்டிகேஸ்வரர் என்ற பெயரில் வழங்கப்படுகிறார்.

கண்ணுக்கு அஞ்சனம் தீட்டும் மருத்துவ சிகிச்சையைச் செய்து வந்த மருத்துவர்கள் இந்த புத்த விகாரங்களில் முன்பு இருந்தனர். சுசீந்திரத்தில் அஞ்சனம் எழுதிய கண்டன் சாஸ்தா என்ற கோவில் உள்ளது. இங்கு இப்பொழுதும் கண்ணில் அஞ்சனம் எழுதப்படுகிறது.

**ஜேஷ்டா தேவி கோவில்**

ஜேஷ்டா தேவி புத்த தெய்வங்களில் ஒன்று என்பது குறித்து அறிவோம். திருவாரூரில் இருந்து பதினெட்டு கிலோமீட்டர் தூரத்தில் இருக்கும் இந்திரன் சாபம் பெற்ற ஊரான **கைச்சினநாதன்** கோவிலில் இந்திரன் சிவலிங்கத்தை தன் கையால் பிடித்து அழுது மன்றாடி சாப விமோசனம் பெற்றதாக தலபுராணம் விரித்துரைக்கின்றது. இதனால் சிவலிங்கத்தில் விரல் ரேகை காணப்படுவதாகவும்



ஜேஷ்டா தேவி

கதை வழங்கப்படுகிறது. இது இந்திரன் கோவில் என்பதற்கு அடையாளமாக இன்றும் இங்கு ஜேஷ்டாதேவிக்கு தனிச் சந்நிதி உண்டு. இது தவிர இங்கு கோஷ்டங்களில் ஜேஷ்டாதேவி, துர்கா, சரஸ்வதி ஆகியோர் காணப்படுகின்றனர். இறைவி வெள்வளை நாயகி என்று அழைக்கப்படுகிறாள்.

## பெருமாள் கோவிலாக மாறிய இந்திரன் கோவில்

காஞ்சிபுரத்தில் உள்ள அத்திவரதர் கோவில் அங்கு பௌத்தம் செல்வாக்கு பெற்றிருந்த காலத்தில் இந்திரனுக்குரிய கோவிலாக விளங்கியது. அவனது வெள்ளை யானை அத்திகிரி என்று சமஸ்கிருதப் பெயர் மாற்றம் பெற்றது. பௌத்த தெய்வங்களான பிரம்மா, சரஸ்வதி தொடர்பான கதைகள் வைணவச் சாயம் பூசப்பட்டன. சரஸ்வதி தன்னை அழைக்காமல் யாகம் நடத்திய பிரம்மனை சபித்து அவனது சத்திய விரத சேத்திரத்தை (காஞ்சி புரத்தை) இருளில் மூழ்கடித்தாள். இதன் பிறகு வைணவக் கதை தொடங்குகிறது. அங்கு கிழக்கு ஒளியாக பெருமாள் தோன்றினார். சரஸ்வதி தன் சக்தியைக் கொண்டு கருங்காளியை திருமாலுடன் போர் புரிய அனுப்பினாள். கருங்காளியை திருமால் கொன்று அழித்தார். ஒரு மைல் தொலைவில் கருங்காளிக்கு ஒரு கோவில் உண்டு.

## ஓம் பத்மம் மணி ஹ்யும்

இந்திரன் வழிபடப்பட்ட இக்கோவிலில் ஆவுடையாருடன் கூடிய பாணம் என்பது புத்த சமயத்தின் ஓம் பத்மம் மணி ஹ்யும் என்ற தாமரை சூத்திரத்தின்படி அமைந்த பௌத்த வழிபாட்டு வடிவம் ஆகும். பத்மம் என்பது பெண்ணையும் மணி என்பது ஆணையும் குறிக்க, இந்த இரு குறியும் இணைந்து உறவு

கொள்ளும் வடிவமாக இவ் வழிபாட்டு வடிவம் அடையாளப்படுத்தப்பட்டு இருந்தது.

புதிய சிவன் கோவில்களில் பெயர் மாறினாலும், கதை மாறினாலும், கருத்து மாறாமல் மக்கள் மனதில் நிலைத்துள்ளது. இங்கு வாழ்ந்து வந்த மக்கள் கண்ணாயிரம் என்ற இந்திரனின் பெயரை மறக்காமல் சிவனைக் கண்ணாயிரநாதர் என்று அழைத்து வருகின்றனர். ஜப்பான் நாட்டில் இந்திரனை பற்றிய உயர்வான எண்ணமே இருப்பதால் அங்கு இன்றும் இந்திரன் தாய்ஷகொதென் என்ற பெயரில் உயர் தனித் தெய்வமாகக் கோவில் கொண்டுள்ளான்.



யானை இந்திரன், தேனி
(படம்:சண்முகக்குமார், தென்பொதிகை ஆவணக் காப்பகம்)



# 5. யானைக் கடவுளர் - காங்கி தென் வழிபாடு

தமிழ்நாட்டிலிருந்து ஏழாம் நூற்றாண்டில் ஜப்பான் நாட்டிற்கு சீனா வழியாக யானைமுகக் கடவுள் வழிபாடு பயணப்பட்டதாக வரலாற்றுச் சான்றுகள் நமக்கு தெரிவிக்கின்றன. தமிழகத்தில் செழிப்புடன் காணப்பட்ட பௌத்த சமயம் முதலாம் மகேந்திர பல்லவன் காலத்தில் தெய்வ உருவங்களைப் புடைப்பு சிற்பங்களாகப் பதிவு செய்தது. இம்மன்னன் காலத்தில் தமிழகத்தில் முதன்முதலாக குகைக்கோவில்கள் உருவாக்கப்பட்டு அதற்குள் புடைப்புச் சிற்பங்களாக தெய்வ உருவங்கள் செதுக்கப்பட்டு உருவ வழிபாடு தமிழ்நாட்டில் ஆரம்பமாயிற்று.

வட நாட்டில் பெரிய புத்த சிலைகளைச் செய்தது போல அடுத்து வந்த ராஜசிம்மனின் காலத்தில் பௌத்தர்கள் தமிழ்நாட்டில் குகைக் கோவில்களில் பெரிய கடவுளர் உருவங்களைப் பாறைகளில் செதுக்கினர். புத்தர் மற்றும் அவலோகதீசுவரரை அதிக வலிமை மிக்கவர்கள் எனப்போற்றும்



வகையில் பெரிய யானை முகத்துடன் மனித உடலுடன் செதுக்கினர்.

இரண்டாம் நரசிம்மவர்மனான இராஜசிம்மன் காலத்தில் யானைமுகக் கடவுள் தமிழகத்திற்கு வந்ததாக சான்றுகள் மெய்ப்பிக்கின்றன. மாமல்லன் இராஜசிம்மன் புலிகேசியைத் தோற்கடித்து வாதாபியைக் கைப்பற்றிய போது அங்கிருந்த யானைமுகக் கடவுளை எடுத்துக் கொண்டு வந்து தமிழகத்தில் திருச்செங்காட்டங்குடியில் வைத்தான். இவனுடைய காலத்தில் கோவில்களில் யானைமுகக் கடவுள் இரண்டு

கைகளோடு யானை முகமும் மனித உருவமும் கொண்டதாக புடைப்புச் சிற்பங்களாக பெரிய அளவில் செதுக்கப்பட்டன.

நரசிம்மனின் ஆட்சிக்காலத்தில் நரசிம்ம உருவமும் கோவில் தூண்களிலும் குகைக் கோவிலிலும் அவன் பெயரைக் குறிக்கும் வகையில் இடம்பெற்றன. இக்கால கட்டத்தில் குறிப்பாக பாண்டிய நாட்டில் குகைக் கோவிலில் யானை முகக் கடவுளின் புடைப்புச் சிற்பங்கள் நிறைய செதுக்கப்பட்டன.

**எமன் கோவில்**

வட தமிழ்நாட்டில் திண்டிவனம் அருகே எமதண்டீஸ்வரர் கோவிலிலும் எமனுக்குரிய சிற்பம் காணப்படுகிறது. எமன், காலன், எமதர்மன் போன்ற தெய்வங்கள் பௌத்தர்களின் தர்மக்கோட்பாட்டை குறிக்கும் தெய்வங்களாகும். மகாகாலன் பௌத்தர்களின் தலைமைத் தெய்வமாக திபத் நாட்டில் இன்றும் வணங்கப்படுகிறான். அறவாழி அல்லது தர்மச் சக்கரம் என்பது பௌத்தத் தத்துவக் கோட்பாட்டின் முக்கிய அம்சமாகத் திகழ்கிறது.

காலச்சக்கரம் - காலத்தின் சுழற்சி - அதனை நிர்ணயிக்கும் கடவுளாக மகாகாலன் - ஆயுட்காலத்தை முடித்து வைக்கும் எமன் -

தர்மத்தின் அடிப்படையில் செயல்படுவதால் எமதர்மராஜன் என்ற அவனுடைய பெயர் நிலைபெற்றது. தர்மம் என்ற அடிப்படையில் தான் போதி தர்மர், தர்ம பாலர் என துறவிகளுக்குப் பெயர்கள் சூட்டப்பட்டன. பௌத்தம் எமன், காலன், தர்மர் சித்திர குப்தன் ஆகியோரைத் தெய்வமாகப் போற்றியது பௌத்தத்தில் இந்திரனைத் தேவ ராஜா என்று அழைத்தது போல புத்தரை **தர்மராஜா** என்று அழைத்தனர்.

தமிழகத்தில் மிகப்பழைய பிள்ளையார் உருவம் எனக் கருதப்படும் பிள்ளையார் பட்டியில் இருக்கும் பிள்ளையார் சிலை ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று அதில் காணப்படும் கல் எழுத்துக்களைக் கொண்டு நிரூபிக்கப்பட்டுள்ளது. சிலர் ஏழாம் நூற்றாண்டு என்றும் கருதுகின்றனர். எவ்வாறாயினும் இச் சிற்பமே தமிழகத்தின் மிகப் பழைய யானைமுகக் கடவுள் சிலையாகும்.

பௌத்த சமயத்தைச் சேர்ந்த அவலோகிதேஸ்வரரையும் யானைமுகக் கடவுளாகக் கருதி வழிபடும் போக்கு பௌத்த சமயத்தில் இருந்து வந்ததால் இது அவலோகதீசுவரரின் சிலையாகவும் இருக்க வாய்ப்புண்டு என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

அவலோகதீசுவரர் என்பவர் அனைத்து புத்தர்களின் அன்பு வடிவமாகப் போற்றப்படுகிறார். எனவே பௌத்த சமயம் செல்வாக்குடன் இருந்த போது அவருக்குப் பெரிய சிலைகள் வைக்கப்பட்டன. லகுலிசுவரர் சிலையும் சில இடங்களில் சேர்ந்தே இடம்பெற்றது.

**யானையைத் தெரிவு செய்ததற்கான காரணம்**

பௌத்த சமயம் உடம்பை யோக சாதனம் ஆக்கும் பயிற்சிகளில் அக்கறை கொண்ட சமயம் என்பதனால் இந்திரியத்துக்கு முக்கியத்துவம் அளித்தது. இந்திரியத்துக்குரிய வெண்மை நிறமும் முக்கியத்துவம் பெற்றது. யானை வலிமையான விலங்கு என்பதால் யானையும் வெண்மையும் இணைக்கப்பட்டு இந்திரன் வெள்ளை யானையை வாகனமாக கொண்டவன் என்ற கருத்தாக்கமும் உருவாக்கப்பட்டது.

பௌத்த சமயம் யானையை இந்திரனுக்கு நிகரானதாகக் கருதியது. இதனால் இந்திரனுக்கு எழுப்பப்பட்ட கோவில்களில் யானையை அவனுக்குரிய வாகனமாக அல்லது பதிலியாக நிறுத்தி வைத்தது. பிற்காலத்தில் சாஸ்தா அல்லது ஐயனார் கோவில்களில் யானைச் சிலைகள் வைக்கும் மரபு தொடர்ந்தது.

இந்திரனையும் அவனுடைய இந்திரிய ஆற்றலைக் குறிக்கும் வகையில் வெள்ளை யானையையும் தனது சமயச் சின்னமாகக் கொண்டிருந்த பௌத்தம் ஒற்றைக் கொம்பன் [பிள்ளையார்] என்பதையும் *phallic symbol* ஆக அடையாளம் கொள்ளப்படுகிறது.

ஆண் வர்க்கத்தின் வலிமைக்கு அடையாளமாக யானையைக் காட்டும் போக்கு எகிப்து போன்ற கீழைநாடுகளிலும் இருப்பதைக் காண்கின்றோம். எகிப்தில் யானை முகமும் மனித உடலும் கொண்ட வலிமை மிகுந்த ஒரு தெய்வத்தை கோடேஷ் என்ற எபிரேயச் சொல்லால் அழைப்பர்.

*Kodesh* என்ற சொல்லுக்கு இரண்டு பொருள் உண்டு. ஒன்று; அவன் ஒரு ஆண் பாலியல் தொழிலாளி *[male prostitute]* 2 அவன் பரிசுத்தத்திலும் பரிசுத்தமானவன் *[holy of the holiest]* அதாவது இந்திரனைப் போல அவனும் தெய்வ அந்தஸ்துப் பெற்ற தூயவன். அவன் ஒரு கடவுளைப் போல அச்சமுதாயத்தினரால் போற்றப்பட்டான். சமூகத்திற்கு நல்ல மக்களைப் பெற்றுத் தர உதவுகின்றவன் என்பதால் அவனைப் பரிசுத்தவான் என்றும் அழைத்தனர். இவ்வகையில் இந்தியாவிலும் பௌத்த சமய மரபில் ஆண்மகனின் முக்கியத்துவம் உணரப் பட்டது.

தமிழகத்தில் பல்லவ மன்னர்கள் குகைகளைக் கோவில்களாக மாற்றியபோது அந்த குகைகளின் சுவர்களில் புடைப்புச் சிற்பங்களாக செதுக்கப்பட்ட யானைமுகக் கடவுளின் உருவங்கள் **திருமலைப்புரம், தேவர் மலை, அரிட்டாபட்டி, திருப்பரங்குன்றம், கோகர்ணம்** போன்ற இடங்களில் இருக்கும்



அரிட்டாபட்டி பிள்ளையார்

மலைக் குகைகளில் இடம் பெற்றன. சிராப்பள்ளி மாவட்டத்தில் **திருப்பட்டூர் கைலாசநாதர்** கோவிலிலும் செங்கல்பட்டு அருகே வல்லம் **கந்தசேனர் குடைவரை** கோவிலிலும் யானைமுகக் கடவுளின் புடைப்புச் சிற்பம் காணப்படுகிறது.

கி.பி. பத்தாம் நுற்றாண்டில் சோழர் காலத்தில் பிள்ளையார் அல்லது விநாயகர் என்றழைக்கப்பட்ட இக்கடவுள் உருவம் சுற்றாலைத் [பிரகாரத்] தெய்வங்களில் ஒன்றான எட்டனுள் சேர்க்கப்பட்டு தனித்திருமுன் [சந்நதி] தகுதியைப் பெற்றது.

பௌத்தர்கள் காலம் முடிந்து சைவர்களின் ஆதிக்கம் தொடங்கியபோது பிள்ளையாருக்கு என தனிக் கதைகள் தோற்றுவிக்கப்பட்டன. அப்போது சம்பந்தர் எழுதிய தேவாரத்தில் ஆண் யானையும் பெண் யானையும் சேர்ந்ததால் அதாவது சிவனும் பார்வதியும் யானை வடிவில் இணைந்து பெற்ற குழந்தை பிள்ளையார் என்ற தகவல் இடம்பெற்றது.. சிவனுக்கு உதவுவதற்காக தோற்றுவிக்கப்பட்ட குழந்தை பிள்ளையார் என்ற கதையும் உருவானது.

திருமந்திரத்தில் விநாயக வழிபாடு பற்றி எந்தக் குறிப்பும் காணப்படவில்லை.

மாணிக்கவாசகர் திருவாசகத்தில் பிள்ளையாரைப் பற்றிய குறிப்புகள் இடம் பெறவில்லை. எனவே அவர் காலம் வரை கூட விநாயகர் வழிபடு கடவுளாக சைவசமயத்தில் சேர்க்கப்பட வில்லை. வைணவமும் பிள்ளையாருக்கு தும்பிக்கை ஆழ்வார் எனப் பெயர் சூட்டி தன் சமயத்தில் சேர்த்துக் கொண்டது.

## ஜப்பானில் விநாயகர் வழிபாடும் வகைகளும்

கிபி 806 ஆம் ஆண்டில் சீனா வழியாக பௌத்தர்கள் ஜப்பானுக்கு யானை முகக் கடவுளைக் கொண்டு சென்றனர். ஜப்பானிலும் தெய்வம் என்ற தமிழ்ச் சொல்லே தென்/ம் என்று சிறிய மாற்றத்துடன் பயன்படுகிறது. தென் என்ற சொல் ஆண் கடவுளையும் தெய்யோ என்ற சொல் பெண் கடவுளையும் குறிக்கின்றது. ஜப்பானில் யானைமுகக்



VINAYAKA



BINAYAKA-TEN

கடவுளை பினாயக் தென் என்பர். பௌத்தம் செல்வாக்குடன் திகழ்ந்த ஒரிசா, கலிங்கா மற்றும் வங்காள மாநிலங்களில் வ ப என ஒலிக்கப்படும் அங்கு விநாயகர் பினாயக் ஆனார். அதே ஒலிப்பு முறையில் ஜப்பானிலும் பிநாயக தென் என்று அழைக்கின்றனர்.

விநாயகரை ஜப்பானில் **தாயி ஷோ தென்** என்றும் மிகப் பெரிய கடவுள் என்ற பொருளிலும் அழைக்கின்றனர். தாயி என்றால் ஜப்பானில் பெரிய என்பது பொருள். விநாயகக் கடவுள் ஜப்பானில் இளைஞர்களுக்குக் காதலரைச் சேர்த்து வைக்கும் தெய்வமாகவும் மூத்தவர்களுக்குத்



ஜப்பானில் விநாயகர்

*தொழிலில் நல்ல இலாபம் பெற்றுத் தரும் தெய்வமாகவும் விளங்குகிறார். திபெத் நாட்டில் மகாகாலன் முக்கியத் தெய்வமாக வழங்கப்படுவதால் அங்கு மகா காலனின் அடியில் விநாயகர் காணப்படுகிறார். விநாயகர் ஜப்பானில் முப்பதுக்கும் மேற்பட்ட வடிவங்களில் பல உருவங்களில் வணங்கப்படுகிறார்.*

*விநாயகரின் 32 வடிவங்களில் ஒன்று* ***துவி விநாயகர்*** *எனப்படும் இரு முக விநாயகர் ஆகும். இரண்டுமே யானை முகமாக உள்ளன. இவரை* ***janus of india*** *என்று அழைக்கின்றனர். ஜேனஸ் என்ற தேவதை இரண்டு முகங்களை கொண்டது. கடந்த காலத்தையும் எதிர் காலத்தையும் அந்த முகங்கள் குறிக்கின்றன. இந்தத் தெய்வத்தின் பெயரால் ஆங்கில ஆண்டின் ஜனவரி என்ற முதல் மாதம் அழைக்கப்படுகின்றது. அதுபோல இரட்டை முகக் கணபதி கடந்த காலத்திற்கும் எதிர்காலத்திற்கும் இடையிலான இணைப்பாக விளங்குகிறார். தமிழகத்தில் பஞ்சமுகக் கணபதி உண்டு.*

***விநாயக புராணக் கதைகளில் ஒன்று***

*அரக்கர்களுக்கும் தேவர்களுக்கும் போர் நடந்தபோது அரக்கர்களை ஏராளமாகப் பெற்று*

கொடுத்த வல்லமை பெற்றிருந்த வல்லபி என்ற மூதாயின் காம கேந்திரத்தைத் பிள்ளையார் தன் தும்பிக்கையால் அடைத்தார். இதனால், அரக்கர்களின் பிறப்பு தடுத்து நிறுத்தப்பட்டது. தேவர்கள் வெற்றி பெற்றனர். இவரும் வல்லப விநாயகர் என்று போற்றப்பட்டார். இக்கதையின்படி விநாயகரின் உருவச் சிலைகள் தமிழகக் கோவில்களில் இடம்பெற்றன. தூண்களிலும் புடைப்புச்சிற்பங்களாகக்காணப்படுகின்றன.

வல்லப விநாயகர் கதை பெண்ணாதிக்க காலத்தின் முடிவையும் ஆணாதிக்க காலத்தின் தோற்றத்தையும் பதிவு செய்துள்ள புராணக் கதை ஆகும். ஆணாதிக்க சமுதாயம் தோன்றிய காலத்தில் மக்கள் தொகை பெருக்கத்துக்கு ஆணின் பங்கு தேவை என்பது உணரப்பட்ட காலத்தில் சமுதாயத்தில் ஆண்களுக்கு மிகப் பெரிய அந்தஸ்து வழங்கப்பட்டது. ஆண்மைச் சிறப்பை வலியுறுத்த வலிமை மிகுந்த விலங்கான யானையை அடையாளமாகக் கொண்டனர். ஆண் என்பவன் யானையை நிகர்த்தவன் என்ற பொருளில் யானை முகமும் மனித உடலும் கொண்ட உருவங்கள் செதுக்கப் பட்டன.

**பிள்ளையார்பட்டியின் தனித்துவம்**

ஆதிகாலத்தில் இளைஞர்கள் ஆணும் பெண்ணுமாக குகைகளில் கூடிவாழும் முறை

காணப்பட்டது. அங்கிருந்த சில மாதங்களில் பெண் கருவுற்ற பின்பு ஊருக்குள் அழைத்து வரப்பட்டு அவள் சமுகத்தின் மதிப்புமிகு அங்கத்தினராக ஏற்றுக் கொள்ளப்படுவாள். இத்தகைய குகைகளை மக்கள் சோபனத்துக்காகவே பயன்படுத்தினர். இவை இன்றும் குழந்தைப் பேற்றுடன் தொடர்புடைய கதைகளைக் கொண்டனவாக உள்ளன. திண்டிவனம் அருகே உள்ள முக்கல் என்ற குகை சீதை வந்து இருந்து பிள்ளை பெற்ற குகை என்ற கதையை கொண்டுள்ளது. இதனால் திரு முக்கல் என்றும் அழைக்கப்படுகிறது.

ஆதியில் இளைஞர்கள் தங்கியிருந்த சோபனக் கூடமாக விளங்கிய குகைகளில் யானை உருவங்கள் பௌத்தர்களால் புடைப்புச் சிற்பங்களாக செதுக்கப்பட்டன. இளைஞரின் காதலுடன் தொடர்புடைய யானை முகக் கடவுள் ஜப்பானுக்குச் சென்ற காலம் அதுவென்பதால் அங்கு அவர் காதல் கடவுளாகவும் விளங்குகிறார். பிள்ளையார் பட்டியில் காணப்படும் பிள்ளையார் உருவம் அதன் முன்னாள் உள்ள சோபன மண்டபம் அங்குப் பின்னர் எழுப்பபப்பட்ட மருதீஸ்வரர் கோவில் மருதீஸ்வரரின் தலவிருட்சமாக இருக்கும் மருதமரம் [அர்ஜுனா மரம்] ஆகியவை இக்கருத்தை உறுதி செய்கின்றன.

விநாயகர் வழிபாடு தமிழகத்தில் இருந்து பௌத்தர்கள் மூலமாக ஜப்பானுக்குச் சென்றதைப் போல பௌத்த சமயம் பரவியிருந்த சீனா போன்ற மற்ற நாடுகளுக்கும் சென்றது. அங்கு விநாயகருக்கு **மகா பைணி** என்ற பெயர் வழங்கப்படுகிறது. சீனாவில் விநாயகர் சிலை வடிவங்கள் ஆண்மையின் வீரியத்தைக் கூடுதலாகக் குறிக்க யானை முகத்தோடு புலியும் சேர்த்து பயன்படுத்தப்பட்டுள்ளது. இங்கு புலித் தோலை உடுத்தி முத்துமாலையும் கிரீடமும் தரித்த யானை முகத்தவராக விநாயகர்



*காணப்படுகிறார்.*

### ***மற்ற பௌத்த நாடுகளில் விநாயகர் உருவங்கள்***

*கிபி 513இல் சீனாவில் செய்யப்பட பழைய விநாயகர் சிலை டுங்குரங் என்ற ஊரில் காணப்படுகிறது.* ***திபெத் நாட்டில்*** *விநாயகர் பெண் வடிவில்* ***கணேசினி****யாக வணங்கப்படுகிறார். இந்த பெண் வடிவ விநாயகருக்கு நெற்றியில் பிறைச் சந்திரன் திலகம் போல வரையப்பட்டுள்ளது. புத்தர் சிலை அருகே காணப்படும் இச்சிலையும் காணப்படுகிறது. அங்கு மகா காலன் வலிமையான ஆண் தெய்வமாக போற்றப்படுகின்றான். விநாயகரை இங்குப் பல கோவில்களில் முன் வாசல்களில் காவல் தெய்வமாக வைத்துள்ளனர். இப்பழக்கம் தமிழகத்திலும் காணப்படுகிறது. இங்கு அவர் கையில் கமண்டலம், மோதகம், கோடரி, திரிசூலம் ஆகியவை உள்ளன.*

***கம்போடியா நாட்டில்*** *ஒற்றைத் தந்தத்துடன், மூன்று கண்களும் கொண்டு கமண்டலம், திருவோடு ஆகியவைகளோடு* ***ப்ராஹ்கணேஷ்*** *என்ற பெயரில் யானை முகக் கடவுளை அங்கு வழிபடுகின்றனர்.*

***ஜாவா தீவுகளில்*** *யானை முகக் கடவுளைக் கல்விக் கடவுளாகக் கருதி மொட்டைத்*

தலையும், உடையாத தந்தமும் கொண்டு ஆற்றங்கரையில் சுயம்புமூர்த்தியாக உருவாகி இருப்பதாகவும் நம்பி வழிபடுகின்றனர். மண்டையோடும், எலும்பு மாலையும் அணிந்து கோடாரியும், கரண்டியும் கொண்ட உருவத்தில் அவர் வழிபடப்படுகின்றார்.

**எகிப்து நாட்டில்** போர் மற்றும் அமைதியின் கடவுளாக சொர்க்கத்திற்கான வாயில் கதவைத் திறக்கும் சாவியை கையில் வைத்திருப்பவராக யானைமுகக் கடவுள் வழிபடப்படுகிறார்.

**பினாயகன் தென்- ஜப்பானின் விநாயகர்**

ஜப்பானில் யானை முகக் கடவுள் **பினாயகன்தென்** அல்லது **காங்கி தென்** என்ற பெயர்களில் வணங்கப்படுகிறார். இவர் திசைகளின் காவலராகக் காவல் தெய்வமாக கிபி ஆறாம் நூற்றாண்டு முதல் வழிபடப்பட்டு வருகிறார்.

நேப்பாளத்தில் விநாயகருக்கு இரண்டு மூஞ்சூறு வாகனங்கள் உள்ளன இங்கு புத்தர் தன் சீடரான ஆனந்தனுக்கு **கணபதி ஹ்ருதயம்** என்ற மந்திரத்தை அருளினார். என்ற நம்பிக்கையும் வழங்குகிறது இம் மந்திரத்தைச் சொல்லிய பிறகே நேபாளிகள் அனைத்துச் செயல்களையும் செய்யத் தொடங்குகின்றனர். இம்மந்திரத்தைச் சொல்லிய

பிறகு இவர்கள் தங்களுடைய அறுவடையைத் தொடங்குவர். நேபாளத்தின் தலைநகரான காத்மாண்டுவில் நாகம் குடை பிடித்துக் கொண்டிருக்க ஆறு கைகளைக் கொண்ட விநாயகர் காணப்படுகிறார்.

## பிள்ளையார் கோவிலாக மாறிய புத்தர் கோவில்கள்

பத்தாம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் புத்தர் சிலைகள் பல இடங்களில் இருந்து வந்தன. பின்னர் சைவம் தலையெடுத்தபோது அனைத்து புத்தர் சிலைகளையும் அகற்றிஉடைத்துவிட்டு அங்கு பிள்ளையார் சிலைகளை வைத்து விட்டனர் என்று 'பௌத்தமும்', 'தமிழும்' என்ற நூலில் மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் குறிப்பிட்டுள்ளார். அங்கிருந்த பிள்ளையார் சிலைகளை அப்படியே வாசல் தெய்வமாக கொண்டு வந்து வைத்துவிட்டனர் என்பதே உண்மை. பல்லவ மன்னர்களும், சோழ மன்னர்களும் புத்த விகாரைகளுக்கு அதிக மானியங்களும், பல ஊர்களும் அளித்திருந்ததால் அவ்விகாரைகளை முற்றிலும் இடித்துத் தரை மட்டமாக்காமல் பிள்ளையாரையும், இந்திர பாணத்தையும் [சிவலிங்கமாக்கி] அங்கேயே வைத்துக்

கொண்டு பெயரை மட்டும் மாற்றி வைதீகச் சமயத்தார் தன்னகப்படுத்தினர்.

புத்தர் கோவிலுக்கு மாங்காடு கிராமம் மானியமாக கொடுக்கப்பட்டதாக சுந்தர பாண்டியனின் கல்வெட்டு சாசனம் குறிப்பிடுகிறது. இம்மானியங்களை இழக்க சைவ வைணவ மதத் தலைவர்கள் விரும்பவில்லை. கோவிலை இடிக்காமல் புத்தர்களின் சமய மரபுகளை மட்டும் அழிக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இதற்காக புதிய தலபுராணக் கதைகளை அவர்கள் உருவாக்கினர். ஜப்பானில் இப்பிரச்னையே இல்லை.

**போதி மரம்**

பௌத்தத்தில் ஆலமரத்தின் கீழ் புத்தர் ஞான ஒளி பெற்றதனால் ஆலமரம் வழிபடு பொருள்களில் ஒன்றாயிற்று. ஆலமரத்தின் கீழ் புத்தர் இருக்கும் சிலைகளை ஆலமரத்தின் கீழ் இருப்பவர் தட்சிணாமூர்த்தி என்றும் சைவர்கள் கதைகளை உருவாக்கினர். அரச மரத்தின் கீழ் அமைக்கப்பட்ட புத்தர் சிலைகள் பின்னர் அரசமரத்தின் கீழ் அமர்ந்த பிள்ளையார் சிலைகளாக மாற்றம் பெற்றன. இந்த பிள்ளையார் வழிபாடு சமூகத்தில் ஆழமாக ஊன்றி விட்டதனால், அதனை மாற்றாமல் கதைகளை மட்டும் மாற்றிக் கூறினார்.

***ஜப்பானில் சாமி – காமி***

*தமிழகத்தில் தெய்வத்தைக் குறிக்கும் சாமி என்ற சொல் ஜப்பானில் காமி என்று பெண் தெய்வங்களை அங்கு குறிக்கின்றது. தெ என்ற தமிழ்ச்சொல் ஜப்பானில் தென் தெய்யோ என மாறியுள்ளது. பௌத்தம் செல்வாக்குப் பெற்றிருந்த கேரளத்தில் இன்றும் 'தெய்யோ' என்பது பத்தினித் தெய்வமான கண்ணகியை குறிக்க பத்தினி தெய்யோ என வழங்குகின்றது. தெய்யோ கூத்து என்பது பத்தினித் தெய்வத்தைப் பாடி வழிபடும் கூத்தாகவே கேரளாவில் இருப்பதைக் காண்கின்றோம்.*

*ஜப்பானில் அனைத்தையும் தெய்வம் என்ற சொல்லால் குறிப்பிடுவது போல பௌத்தம் விரிவாக பரவியிருந்த கேரள மாநிலத்தில் அனைத்துப் பெண் தெய்வத்தையும் பகவதி என்ற ஒற்றைச் சொல்லால் குறிக்கின்றனர்.*

*சாமி என்ற சொல் திராவிட மொழிகளில் பொதுவியல்புகளில் ஒன்றான சகர ககர மாற்றத்தை அடியொற்றி 'காமி' என இங்கு வழங்கப்படலாம். ஆனால் ஜப்பான் மொழியில் காமி என வழங்கப்படுவது குறித்து ஆய்வு தேவை.*

பௌத்த தெய்வமான காமாட்சி என்பதன் வேர்ச் சொல்லான காம[ம்] என்பதன் திரிபாக 'காமி' எனப் பெண் தெய்வங்கள் வழங்கப்பட்டிருக்கலாம். பௌத்த காஞ்சி என்றழைக்கப்பட்ட காஞ்சிபுரத்தில் தற்போது



காஞ்சி காமாட்சி அம்மன்

உள்ள காமாட்சியம்மன் கோவில் முன்பு பௌத்த பெண் தெய்வமான தாரா தேவியின் கோவிலாக இருந்தது என மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

**ஜேஷ்ட தேவியும் கஜலட்சுமியும்**

தாராதேவி வழிபாட்டைப் போலவே பௌத்தத்தில் ஜேஷ்ட தேவி வழிபாடும் புகழ்பெற்றிருந்தது. ஜேஷ்ட தேவி என்பவள் மூத்த தேவி ஆவாள். விநாயகருக்குரிய பல பெயர்களில் ஜேஷ்டப் புத்திரன் என்பதும் ஒன்றாகும். ஜேஷ்ட என்றால் மூத்த என்பது பொருள். இன்றைக்கும் மலையாளத்தில் ஜேஷ்டன் என்பதை சேட்டன் எனத் திரிந்து மூத்தவன் என்ற பொருளில் அண்ணன், கணவர் போன்ற மூத்தவர்களைக் குறிக்கிற சொல்லாக பயன்படுத்துகின்றனர்.

பௌத்த சமயத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த ஜேஷ்டாதேவியை சைவ ஆதிக்கம் மிகுந்த பின்னர் மூதேவி என்று அழைத்து ஏசினர். தாரா தேவிக்கும், புத்தருக்கும் எடுக்கப்பட்ட கோவில்களில் ஜேஷ்டாதேவி தென்மேற்கு மூலையில் தனிச்சந்நிதி பெற்று இருந்தாள். இவளுக்கு அருகில் குளிகனும், மாந்தியும் இடம் பெற்றிருந்தனர். ஜேஷ்டா தேவியின் உருவம் பெண்ணின் வளமைக்

கோட்பாட்டைக் குறிக்கும் வகையில் மிகப் பெரிய வயிறுடன், ஒரு காலை மடித்து, ஒரு காலைத் தொங்கவிட்டு காணப்படும். சோழ நாட்டில் சில இடங்களில் அவளுடைய பெண் உறுப்புக்கு பதிலாக **மலர்ந்த தாமரையும்** செதுக்கப்பட்டு இருந்தது. தாமரை ‘பத்மம்’ என்ற பெயரில் பௌத்த சமய மரபில் மிகுந்த முக்கியத்துவம் பெற்றிருந்தது.

யானை ஆணின் வீரியத்தை குறிப்பதைப் போல தாமரை பெண்ணின் கரு வளத்தை குறித்தது. அதன் பொகுட்டு எனப்படும் [மஞ்சள் நிற மகரந்தப் பகுதிய] உன்னி என்று அக்காலத்தில் அழைக்கப்பட்டது. கண்ணகியை புத்த சமயத்தவள் என்று கருதும் அறிஞர் சங்க இலக்கியத்தில் இடம் பெற்ற “ஒரு முலை இழந்த திருமா உன்னி” என்ற தொடர் அவளைக் குறித்ததாக எடுத்துக்காட்டுவர்.

**ஓம் பத்மம் மணி ஹயும்** என்ற மந்திரம் பௌத்தர்களின் தாரக மந்திரம் ஆகும். தாமரையும், ஜேஷ்டா தேவியும் பெண்ணின் கருவளத்தை காட்டின. இவளது உருவச் சிலை சில ஊர்களில் கருவுற்ற பெண்ணைப் போல பெரிய வயிறும் தளர்ந்த மார்பகமும் கொண்டவளாக வடிவமைக்கப்பட்டிருந்தது.



கஜலெட்சுமி

ஜேஷ்டா தேவியை மூதேவி என்று ஏசிய சைவர்கள் அதனை வெளியே தூக்கி எறிந்துவிட்டு அதே தென்மேற்கு மூலையில் வேறு ஒரு சிலையை வைத்தனர். மூதேவியின் தங்கை சீதேவி என்று கூறி அங்கு செல்வத்தின் கடவுள் என்ற பெயரில் கஜ லட்சுமி சிலையை

வைத்தனர். ஜேஷ்டா தேவியை வணங்கி வந்தவர்களின் மன நிறைவுக்காக இந்த லட்சுமி சிலைக்கு அருகில் அங்கு இரண்டு யானைகள் அவளுக்கு பூ போட்டு வணங்குவது போன்ற தோற்றத்தை கொடுத்தனர்.

யானை வலிமையின் சின்னமாக இருந்ததனால் இரண்டு யானைகளுடன் கூடிய இந்த பெண் தெய்வம் கஜ லட்சுமி என்று அழைக்கப்பட்டது. கஜ லட்சுமியின் சிலை அனைத்து சிவன் கோவில்களிலும், தென்மேற்கு மூலையில் அமைக்கப்பட்டு ஜேஷ்டா தேவியின் இடத்தைப் பிடித்துக் கொண்டது. வலிமை மிக்க யானைகள் அவளை வணங்குவதாக ஒரு மாற்று வடிவம் உருவாக்கப்பட்டது.

**நிறைவு**

பௌத்த சமயத்தில் வலிமையின் சின்னமாக கருதப்பட்ட யானை முகமும், மனித உடலும் கொண்ட கடவுள் உருவம் கி.பி. ஆறாம் நூற்றாண்டில் தமிழகத்திற்கு வந்து இங்கிருந்து பௌத்தத் துறவிகள் மூலமாக ஜப்பான், சீனா போன்ற நாடுகளை அடைந்தது. அங்கு வலிமை, செல்வம், வெற்றி ஆகியவற்றிற்கு அடையாளமாக இன்றும் போற்றப்படுகிறது.



# 6. காளி, இடாகினி (டாகினி தென்) வழிபாடு

காளி கோட்பாடு பெண்ணை ஆணுக்கு அடங்காதவளாக ஆணை அடக்கி மிதித்து ஆளும் போர்க்குணம் படைத்தவளாக காட்டுகிறது. உலகெங்கும் உள்ள பல நாடுகளில் காளி எனப்பட்ட பெண் தெய்வம் கேலே, காலே என்று பல பெயர்களில் வழிபடப்பட்டாள். இந்தியாவில் கங்கை யமுனைச் சமவெளிப்பகுதிகள் தவிர மற்ற பகுதிகளில் இமாசலப் பிரதேசம், பஞ்சாப், அஸ்ஸாம், வங்காளம் மற்றும் தென்னிந்தியா முழுக்க காளி வழிபாடு காணப்படுகிறது. இவள் இனக்குழுவின் தலைமை தாங்கி போர் நடத்திய போர்த்தெய்வமாக இருந்தாள். இதனால் அரசர்கள் போரில் வெற்றி வேண்டி இவளை கொற்றவை என்றும் துர்க்கை என்றும் வணங்கி வந்தனர். காளி இறப்புடன் தொடர்பு படுத்தப்பட்டாள். அவள் மண்டையோடுகளை கழுத்தில் மாலையாக கோர்த்து அணிந்திருந்தாள். ஒரு கையில் வெட்டிய தலையின் உச்சி மயிரைப் பிடித்திருந்தாள். அதில் இருந்து ஒழுகும் ரத்தத்தை மறு கையில்

உள்ள ஓட்டில் பிடித்த படி இருந்தாள். ஒரு கையில் கத்தியும் ஒரு கையில் சூலமும் கொண்டு கொடுரமாக காட்சி அளித்தாள். இடுப்பில் வெட்டுண்ட கரங்களை ஆடையாக்கி உடுத்தியிருந்தாள். சில



இடங்களில் ஆணின் அடையாளமான சிவனின் நெஞ்சின் மீது கால் வைத்து மிதித்தபடி சிவந்த நாக்கைத் தொங்கவிட்டு சிங்கப்பற்களுடன் கோரமாகக் காட்சி அளிப்பாள். தாந்திரிகத்தில் காளி சிவனின் மீது சம்போக நிலையில் அமர்ந்து அவனது தலையை வெட்டி கையில் வைத்திருப்பவளாவும் சித்திரிக்கப்பட்டாள்.

### இந்திய வரலாற்றில் காளி

ஆதிகால மனிதனின் காலத்தில் தாய்த் தெய்வமாகக் கருதப்பட்ட காளி கிபி மூன்றாம் நூற்றாண்டில் வடநாட்டில் குப்தர் காலத்தில் போர்த் தெய்வமாகப் போற்றப்பட்டாள். போருக்குச் செல்வதற்கு முன்பு இவளுக்கு ரத்தப் பலியிட்டனர். அடுத்த இரண்டு மூன்று நூற்றாண்டுகளில் காளியை துர்காவாக்கி பார்வதியின் கோப வடிவமாக மாற்றி அமைத்தனர். தேவி மகாத்மியம் இவளை துர்க்கா என்று அழைத்தது. அடுத்து தோன்றிய காதம்பரி, மாலதி மாதவம் ஆகிய நூல்கள் இவளை இரத்த தாகம் எடுத்த சண்டி என்றும் சாமுண்டி என்றும் அழைத்தன. இவளைப் புராணத் தெய்வம் ஆக்கின. நாட்டுப்புற மக்களின் தெய்வமான காளியை மெல்ல மெல்ல புராணங்களில் இடம்பெற வைத்தனர்.

கிபி எட்டாம் நூற்றாண்டில் காளி தாந்திரிக மரபில் இணைக்கப்பட்டு யோகினியாகவும்

டாகினியாகவும் பைரவருடன் சம்போகிக்கும் பெண்ணாகவும் மாற்றப்பட்டாள். அதுவரை காளி தனித்தெய்வமாக இருந்தாள். தாந்திரிகத்துக்குள் கொண்டு வரப்பட்டதும் காளிக்கும் சம்போகம் தவிர்க்க முடியாததாயிற்று. லிங்க புராணத்தில் இவள் சிவனின் உடலுக்குள் புகுந்து தாருகாசுரனைக் கொன்றதாகவும் கதை சொல்லப்பட்டது.

காளி வழிபாடு இறப்புடனும் பேரழிவுடனும் தொடர்புபடுத்தப்பட்டதனால்



சிவன் மீது அமர்ந்திருக்கும் காமாட்சி

அவளுக்கான் கோவில்கள் எழுப்புவதில் இந்து சமயத்தில் சில தடைகள் இருந்தன. காளி கோவிலை ஊருக்குள் கட்டக் கூடாது ஊருக்கு வெளியே சுடுகாட்டுக்கு தாழ்த்தப்பட்டவர் வாழும் இடங்களுக்கு அருகில் கட்டலாம் என்று விதிகள் செய்தனர். வீட்டில் காளி தெய்வத்தின் படத்தை வைத்து வழிபடக் கூடாது. பெண்கள் காளியை வழிபடுதல் கூடாது. காளியைப் பெண்கள் வழிபட்டால் அவர்கள் வீட்டுக்கும் கணவனுக்கும் அடங்காதவர்களாகி விவாகரத்துப் பெற்று விடுவர் என்ற கருத்து பரப்பபப்பட்டது. காளியை வழிபடும் ஆண்கள் கடும் பிரம்மச்சர்யம் காக்காவிட்டால் கால் கை விளங்காமல் அவதிப்பட நேரிடும் என்றும் கருத்து நிலவியது. இதனாலும் காளி துஷ்ட தேவதையாகக் கருதப்பட்டாள்.

கிபி பதினோராம் நூற்றாண்டில் எழுதப்பட்ட கலிங்கத்துப் பரணி காளி பற்றி வருணிக்கிறது. தமருகம் ஒலிக்க அதன் தாளத்துக்கு ஏற்ப சாதகர் என்னும் உதவியாளர் பேயும் யோகின மாதரும் ஆடிக்கொண்டு வரும் போது தமது வலக்கையில் படைக்கருவிகளையும் இடக்கையில் அப்போது அறுக்கப்பட்ட புதிய தலைகளையும் தூக்கிக் கொண்டு வருகிறார்கள். தாயிடம் குழந்தைப் பேய்கள் இறைச்சி கேட்டு அழுகின்றன.

*அவற்றின் பசியமர்த்த தாய்ப் பேய் பிணத்தை இழுத்துச் சென்று தின்ற நரிகளின் வாயில் இருந்து பிணத்தின் தசையைப் பிடுங்கி குழந்தைகளுக்குத் தருகின்றன.*

## ***டாகினி***

*டாகினி அல்லது இடாகினி என்று அழைக்கப்பட்ட தெய்வம் ஆரம்பத்தில் பௌத்த சமயத்தில் யோக சித்தி பெற்ற பெண்ணுக்கு கிடைத்த சிறப்புப் பெயராக இருந்தது. யோகினியரில் சிறந்தவள் இடாகினி ஆனாள். இவளும் சுடுகாட்டில் திரிபவள்; அரையாடை உடுத்தியவள்; பிணங்களைத் தோண்டி எடுத்துத் தின்பவள் என்று எரியும் சிதையில் இருந்து பிணத்தின் தசையைப் பிய்த்துத் திண்பாள் காளியின் மெய்க்காப்பாளர் சாதகர் எனப்பட்டனர். அவர்களுடன் இடாகினியும் இருப்பதாக தமிழ் இலக்கியங்களில் சொல்லப்பட்டது.*

## ***தமிழ் இலக்கியத்தில் இடாகினி***

*சிலப்பதிகாரத்தில் மாலதி என்பவள் தனது கணவனின் இன்னொரு மனைவியின் குழந்தை அழுததைக் கண்டு தூக்கி எடுத்து பால் ஊட்டினாள். அந்தக் குழந்தை மூச்சுத் திணறி இறந்துவிட்டது. மாற்றாளோ இவளை ஏசினாள். 'என் பிள்ளையை உயிருடன்*



கொண்டு வந்து தா' என்றாள். மாலதி அக்குழந்தையுடன் சுடுகாட்டுக்கு வந்தாள். அங்கு இடாகினிப் பேய் வந்து அவளிடமிருந்து குழந்தையைப் பறித்துக் கொண்டு போயிற்று. அப்போது பாசண்டச் சாத்தான் எனும் தெய்வம் இடாகினியிடமிருந்து குழந்தையைப் பறித்து

அதற்கு உயிருண்டாக்கிக் கொடுத்தது. காந்தத் திறம் உரைத்த காதையில் இடாகினிப் பேய்

***"பாசண்டச் சாத்தற்கு பாடுகிடந்தா ளுக்கு***
***'ஏசும்படி ஓர் இளங்கொடியாய் ஆசிலாய்***
***செய்தவம் இல்லோருக்குத் தேவர் வரம்கொடார்;***
***பொய்யுரையே அன்று; பொருள்உரையே கையில்***
***படுபிணம் தா' என்று பறித்து அவள்கைக் கொண்டு***
***சுடுகாட்டுக் கோட்டத்துத் தூங்கிருளில் சென்றாங்கு***
***இடுபிணந் தின்னும் இடாகினிப் பேய்வாங்கி***
***மடியகத்து இட்டாள் மகவை"***

என்ற அடிகளில் இடாகினி என்பவள் ஒரு பிணம் தின்னிப் பேய் என்பது தெளிவாகிறது.

கலிங்கத்துப் பரணி என்ற சிற்றிலக்கியத்தில் காளியின் உதவியாளரான சாதகர் மற்றும் இடாகினி பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. போருக்குச் சென்ற கணவன் திரும்பி வராததால் அவனைத் தேடிக் கொண்டு போர்க்களம் வந்த மனைவி இடாகினியிடம் என் கணவனை பார்த்தாயா என்று கேட்கிறாள்.

***"தங்கண வருடன் தாமும் போக வென்றே***
***சாதகரைக் கேட்பாரே தடவிப் பார்ப்பார்***
***எங்கணவர் கிடந்தஇடம் எங்கே என்றறிந்து***
***இடாகினியைக் கேட்பாரைக் காண்மின் காண்மின்"***

என்ற பாடல் சாதகர் மற்றும் இடாகினி பற்றி குறிப்பிடுகிறது.



## இடாகினி பெண்ணா? பெண் பேயா?

*டாகினி என்ற யோகினி பௌத்த சமயத்தின் தெய்வம். இவள் அனைத்து யோக சித்தியும் பெற்றவள் என்பதால் வேண்டும் உருவை எடுக்க முடியும். அவள் பெண் உருவில் வந்து தோன்றுவாள்; அதுவே அவளது இயல்பு. அவளால் வேறு உருவம் எடுத்துச் செயல்படவும் வான் வெளியில் பயணிக்கவும் [sky goer] முடியும், என்று Dakini - Some comments on its Nature and Meaning என்ற கட்டுரையை எழுதிய ஜென் வில்லியம்ஸ் தெரிவிக்கிறார். இடாகினி என்பவள் பெண் தான் என்று ரிச்மான்ட் பல்கலைக்கழகத்தின் சமயத் துறை பேராசிரியர் மிராண்டா ஷா உறுதிபடத் தெரிவிக்கிறார்.*

## இங்கிருந்து பயணப்பட்ட டாகினி

*தமிழகத்திற்கு டாகினி என்ற யோகினி அல்லது பெண் புத்தர் பௌத்தர்கள் மூலமாக சீனாவுக்கு போய் பின்னர் அங்கிருந்து ஜப்பானுக்கு வந்தது. தமிழ்ச் சொற்கள் ட, ல, ர போன்ற எழுத்துக்களைக் கொண்டு தொடங்குவதில்லை என்ற மொழி மரபு பின்பற்றப்படுவதனால் டாகினியுடன் இகரம் முதலில் சேர்க்கப்பட்டு இடாகினி என்றாயிற்று. டாகினி என்ற சொல் எவ்வித மாற்றமும் பெறாமல் டாகினி என்றே*

ஜப்பானில் வழங்கப்படுகிறது. *DAKINI TEN* அதாவது டாகினி தெய்வம் என்றே ஜப்பான் மொழியிலும் இடாகினியை அழைக்கின்றனர்.

## ஷிந்தோவும் பௌத்தமும்

ஷிந்தோ சமயம் என்பது ஜப்பானில் பின்பற்றப்பட்டு வந்த பூர்வீகச் சமயம் ஆகும். பௌத்தம் அங்கே பரப்பப்பட்ட போது அச்சமயம் அரசர்களின் ஆதரவு பெற்ற சமயம் என்ற தகுதியைப் பெற்றதனால் ஷிந்தோ சமயத்தின் தாய்த்தெய்வ வழிபாடு அல்லது பெண் தெய்வ வழிபாடு [நரி ராணி வழிபாடு] புதிய பௌத்த சமயத்தின் யோகசித்தி பெற்ற டாகினியுடன் இணைக்கப்பட்டது. பௌத்தம் புதிய மண்ணின் சமய மரபுகளைத் தன்னகத்தே ஏற்றுக்கொள்ளும் பண்பைப் பெற்றிருந்ததனால் தாய்த் தெய்வத்தை டாகினி என்ற பெயரில் ஏற்றுக்கொண்டது என்பதனால் ஷிந்தோ சமயத்தின் தாய்த் தெய்வக் கோவில்கள் டாகினி கோவில்களாயின. இவ்வாறு ஷிந்தோ சமயத்தின் கோவில்களில் மூன்றில் ஒரு பங்கு கோவில்கள் டாகினி கோவில்களாயின.

## ஆகாச சஞ்சாரியான டாகினி

பௌத்தத்தில் டாகினி மனக் கிலேசத்தை மாற்றி ஞான ஒளியைத் தருவாள். எனவே அவள் ஞான ரூபிணியாக கருதப்பட்டாள்.

இச்சமயம் அவளை ஆகாச சஞ்சாரியாகக் கருதியது. ஆகாயத்தில் நடனம் ஆடுபவள் [sky goer / sky dancer] என்ற பொருளில் KAHANDRO என்ற சொல்லால் திபெத் நாட்டில் வழங்கி வந்த வஜ்ராயன் பௌத்தம் டாகினியை அழைத்தது. யோகப் பயிற்சியில் சிறந்து விளங்கி அதில் உச்ச நிலையை அடைந்த பெண் புத்த நிலையையும் அடைகிறாள் எனபதை வஜ்ராயன பௌத்த பிரிவு மட்டுமே ஏற்றுக்கொண்டது. மகாயான பௌத்த பிரிவு இதனை ஏற்றுக் கொள்வதில்லை.

## திபெத்தின் வஜ்ராயன பௌத்தம்

திபெத்திய பௌத்தம் சக்ர சம்வாராவும் வஜ்ரா யோகினியும் இணைந்து கருணை மற்றும் பிரக்ஞையை உணர்த்துவதை ஆண் பெண் இணைப்பாகக் குறியீட்டு முறையில் உணர்த்தியது. இதை மற்றவர்கள் குறிப்பாக ஆங்கிலேயர்கள் ஆபாசமாக நோக்கினர். யோக சித்தி பெற்று புத்த நிலை எய்திய திபெத்திய இளவரசி யோகினியாகப் போற்றப்பட்டாள் அவள் பத்ம சம்பவாவை மணமுடித்து இடாகினி என்ற தெய்வநிலை எய்தினாள். இவள் இங்கு டாகினியாக வழிபடப் படுகிறாள். இவள் மனம் [காட்சி], மொழி [மந்திரம்], மெய் [முத்திரை] என்ற மூன்றாலும் யோக சித்தி பெற்றவள். வஜ்ராயன பௌத்தத்தின்



வஜ்ராயான யோகி

ஆதிகாலத்து டாகினியான இவளை நரோடாகினி என்றும் அழைத்தனர். நரன் என்றால் மனிதன்; மனித குலத்தில் இருந்து உதித்த டாகினி [நரோடாகினி] என்று இவள் போற்றப்பட்டாள்.

## இடாகினிப் பேய்

*தமிழகத்தில் இடாகினி என்பது பிணம் தின்னும் பேயாக இலக்கியங்களில் சித்தரிக்கப்படுகிறது. சிலப்பதிகாரம் பிணம் தின்னும் பேய் என்று புகார்க் காண்டத்தில் கனாத்திறம் உரைத்த காதையில் கூறுகிறது. கலிங்கத்துப் பரணியும் இடாகினியை சுடுகாட்டில் எரியும் பிணத்தை எடுத்துத் தின்னும் பேயாகவே வர்ணிக்கின்றது. இடாகினி காளிக்கு ஏவல் செய்பவள் என்று சதுரகராதி [பெயரகராதி] குறிப்பிடுகின்றது. அவளை மாயவள், பஞ்சலி வளவை, சதுரகராதி [பொருளகராதி] தெரிவிக்கின்றது.*

## யாம் யுன் தத்துவத்தில் டாகினி

*பாகவத புராணம், பிரம்ம புராணம், மார்க்கண்டேய புராணம், கதா சரித சாகரம் போன்ற நூல்கள் இடாகினி பற்றித் தெரிவிக்கின்றன. பௌத்த சமயம் இவளை தாந்திரீகத் தெய்வமாகக் குறிப்பிடுகின்றது. இந்து சமயம் இடாகினியைத் துஷ்ட ஆவி என்று குறிப்பிட பௌத்த சமயம் இவளைத் தெய்வமாகவும், விடுதலைச் சக்தியாகவும் போற்றுகின்றது. யாம் யுன் என்ற ஆண் பெண் இணைப்பு தத்துவத்தில் யுன் எனப்படும் பெண் டாகினி ஆவாள். இவள் அமைதியானவள். ஆக்ரோஷமானவள் அல்ல.!*

**காளியும் டாகினியும்**

தாய்த் தெய்வ வழிபாட்டுக் காலத்தில் ஆக்ரோஷமான பெண் தெய்வமான காளி பைரவரோடு இணைவதாக கருதப்பட்டது. பைரவரும் காளியும் முகமுகமாக நோக்கியிருக்க காளி பைரவரின் மடியில் அமர்ந்து அவரது இடுப்பை தன்னிரு கைகளால் அணைத்தபடி சம்போகத்தில் இருப்பதாக உருவங்கள் அமைக்கப்பட்டன.

பிற்காலத்தில் இந்நிலை சம போக நிலையாகவும் உணர்த்தப்பட்டது. ஆண் பெண் ஏற்றத் தாழ்வின்றியும் யோக நிலையின் உச்சம் என்பதும் போதிக்கப்பட்டது. காளி பைரவர் இணைப்பு சக்கர சம்வார வஜ்ரவராகி எனப்பட்டது. பின்னர் காளியின் இடத்தை டாகினி பெற்றாள். பௌத்தம் விடைபெற்றுப் போன பிறகு சைவ சமய எழுச்சி ஏற்பட்ட காலத்தில் இவ்விணைப்பு சிவசக்தி சம்போகம் என்றும் மாற்றம் பெற்றது. காளி கோவில் இருக்கும் இடங்களில் பைரவரும் சேர்ந்து இருப்பதற்கு இதுவே காரணமாகும். ஆனால் பைரவரை காளியின் இணைத் தெய்வமாகப் போற்றாமல் காவல் தெய்வமாகக் கருதி இந்து சமயத்தில் வழிபடுகின்றனர்.

## இந்து பௌத்த டாகினிகளின் வேறுபாடு

ஆண் பெண் இணைப்பில் இந்து டாகினிக்கும் பௌத்த டாகினிக்கும் இடையில் வேறுபாடு உண்டு. இந்து சமயத்தில் அவள் சர்வ வல்லமை படைத்தவ சக்தியாக விளங்க பௌத்தத்தில் அவள் அமைதியானவளாக விளங்குகிறாள். பௌத்த சமயத்தில் தாயும் தந்தையுமாக [அறிவும், அன்பும்] இணைந்து இருக்கும் அனுத்தார யோக தாந்திரீகத்தில் ஆண் கருணை மற்றும் உபாய கவுசல்யத்தின் வடிவமாக விளங்குகிறான். பெண் அறிவு அல்லது பிரக்ஞையின் வடிவாகக் கருதப்படுகிறாள். இந்து சமயத்தில் பெண் சக்தியின் வடிவமாகவும், ஆண் சவமாக கிடக்கும் சிவனாகவும் மாறுபட்ட கருத்துடன் வடிவமைக்கப்பட்டுள்ளது.

## டாகினி கடவுட் கோட்பாடு,

இந்தியாவில் ஆரம்பத்தில் யோகினியாகவும், பின்னர் அறிவைக் குறிக்கும் இணை வடிவான [ஜோடி] பெண்ணாகவும் அதற்குப் பிறகு [சிவ] சக்தியாகவும் இறுதியில் சுடுகாட்டில் திரியும் பிணம் தின்னி பேயாகவும் மாற்றம் டாகினி கோட்பாடு பெற்றுள்ளது. ஆனால் ஜப்பானில் டாகினி பெண் தெய்வமாகவே அன்று முதல் இன்று வரை முக்கியத்துவம் பெற்றுள்ளாள். ஜப்பான் நாட்டில் அரசன் முடிசூட்டுவதற்கு

முன்பு டாகினி வழிபாடு நடத்தவில்லை என்றால், அவனது அரசுக்கு உடனடியாக பேரிழப்பு நேரிடும் என்ற அச்சம் நிலவியது. எனவே ஜப்பான் அரசர்கள் டாகினிக்குப் பூசை போட்ட பிறகு முடிசூட்டினர். நவீன காலத்தில் டாகினி வழிபாடு அதோகோ கொண்கேன் [ATOGO GONKEN] என்ற மந்திர உச்சாடனத்துடன் நிகழ்ந்து கொண்டிருக்கிறது.

தர்மபாலர் என்பது பௌத்த சமயத்தில் ஓர் உயர்ந்த தகுதி நிலை ஆகும். மகா காளன் ஓர் தர்மபாலர் ஆவார். இவரை அவலோகதிசுவரர் என்று அழைத்தனர். புத்த நிலை எய்தியவர்களை இப்பெயரால் குறிப்பிடுவது பௌத்த மரபு. பொதிகை [போதி இல்] மலையில் வாழ்ந்த அவலோகதீசுவரரை அங்கு வாழ்ந்த மக்கள் பேச்சு வழக்கில் அகத்தீஸ்வரர் என்று அழைத்தனர். இதுவே அங்கு அகத்தியர் வந்து தங்கியதாகக் கதைகள் புனையவும் ஸ்தல புராணங்கள் எழுதவும் சைவ சமய எழுச்சியின் போது உதவியது.

**விழிப்புணர்ச்சியின் வடிவமான டாகினி**

தர்மபாலர்களில் முக்கியமானவர் பால் தேன் லாமோ [pal den lhamo]என்பவள் ஓர் இடாகினி ஆவாள். இவள் வஜ்ராயன சிம்ம முகி எனப்பட்டாள். புத்த சமயத்தில் பெண்ணின் உயர்ந்த நிலையாக போற்றப்பட்ட

*டாகினி ஞான ரூபிணி ஆவாள். பௌத்தம் பரவியிருந்த இவள் கேரளாவில் டாகினியை பின்னர் பகவதி எனப் பெயர் மாற்றி அழைத்தனர் [Keith Dowman net.]. இன்று பகவதிக்குக் கோவில் இருக்கும் இடங்களிலெல்லாம் ஆதியில் தாய்த் தெய்வ வழிபாடும் பின்னர் டாகினி கோவில்களும் இருந்தன. பெண்ணை டாகினியாகக் கொண்டு வணங்க வேண்டும் என்பது பௌத்த மரபு. ஏனெனில் டாகினி என்பவள் இருமை இல்லாதவள். அவள் அறிவும், விழிப்பும் ஒருசேரப் பெற்றவள், விழிப்புணர்ச்சியின் வடிவமாக டாகினி போற்றப்பட்டாள்.*

***டாகினியும் கலச பூஜையும்***

*வஜ்ராயன பௌத்தத்தில் ஆண் தருபவனாகவும், வெளியேற்றுபவனாகவும் [giver] இருக்க பெண் பெறுபவளாகவும் ஏற்றுக் கொள்பவளாகவும் [receptor] கருதப்பட்டாள். பெண் என்பவள் உளவியல், பாலியல், மற்றும் உடலியல் ரீதியாக எதனையும் ஏற்றுக் கொள்பவளாக இருப்பதனால் அனைவரையும் அணைத்துக் கொள்கின்ற பெருந்தன்மையான பண்பைப் பெற்றவள். இவள் அனைத்தையும் ஏற்றுக் கொள்பவள் என்பதனால் கலசம், கரகம், குடம் என்றும் ஏரி மற்றும் குளம் என்றும் யோனி என்றும் அழைத்தனர்.*

தற்காலத்தில் நடைபெறும் கரக பூஜை, கும்ப பூஜை, கலச பூஜை ஆகியன இத்துடன் ஒப்புநோக்கற்குரியதே.

## டாகினி 'ஓ இனாரி' ஆன வரலாறு

ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்து டாகினியை ஜப்பான் நாட்டில் வணங்கத் தொடங்கினர். அப்போது அவளை அரை நிர்வாணப் பெண்ணாக யோகினியாகச் சித்தரித்தனர். ஹெலான் அரசின் காலம் முடியும் போது இடாகினியை யோகினி என்ற நிலையில் இருந்து ஷிந்தோ தெய்வமான நரி இராணியுடன் இணைத்துவிட்டனர். இவளுடன் எப்போதும் ஒரு வெள்ளை நிற நரி இருக்கும் என்று தெரிவித்தனர். ஜப்பானிய மொழியில் கித்சுனே என்றால் நரி. ஆதியில் ஜப்பானியர் நரிகளுடன் வசித்தனர். எனவே அவர்களின் மண்ணின் சமயமான ஷிந்தோ சமயத்தில் நரியும் ஒரு பெண் காவல் தெய்வம் ஆயிற்று. இதற்கு ஒன்பது வால்கள் உண்டு எனச் சித்தரித்து இதன் அதீத சக்தியை வெளிப்படுத்தினர். இதனை ஷிந்தோ காமி என்பர். நரியை இராணியாக்கி ஷிங்கோ போசாத்சு என்றனர். சொர்க்கத்தில் உள்ள நல்ல நரி இராணியை கிக்கோ தென்னோ என்றனர். இந்த வெள்ளை நரி எப்போதும் டாகினியுடன்

இருக்கும். டாகினியின் இருப்பை இந்த நரியின் மூலமாக அறியலாம்.

### வெள்ளை நரியின் தரிசனம்

ஒரு முறை தாயிரோநோ கியோ மோரி என்பவன் ஒரு சாதாரண இனக்குழுத் தலைவன். அவன் சாலையில் நடந்து வந்தபோது கித்சுனே என்று ஜப்பானியர் அழைக்கும் வெள்ளை நரியைக் கண்டான். உடனே டாகினிக்கு அவன் சிறப்பு பூசைகள் நடத்தினான். அதனால் அவன் அந்த நாட்டின் தலைவனாகி முடிசூட்டி அரசாண்டான் என்ற நம்பிக்கை ஜப்பானில் ஆழமாகப் பதிந்து இருப்பதனால் இன்றைக்கும் டாகினி வழிபாடு அங்கு மந்திர உச்சாடனமாக நடைபெற்று வருகிறது.

### ஓ இனாரி

டாகினியின் தூதுவராக விளங்கும் வெள்ளை நிற நரியை ஓ இனாரி என்ற சொல் குறிக்கின்றது. இந்த நரியை போ ஓ இனாரி என்பர். இது ஆண், பெண் மற்றும் அலி வடிவிலான தெய்வமாகும். இடாகினியின் அடுத்த கட்ட வளர்ச்சியான ஓ இனாரியை மூன்று தெய்வங்களின் சேர்க்கை என்றும், ஐந்து தெய்வங்களின் சேர்க்கை என்றும், ஜப்பானில் புகழ்வது உண்டு. இனாரி ஓ காமி என்ற பெயரில்

இன்று டாகினியை வழிபடுகின்றனர். இத்தெய்வம் செல்வத்துக்கும் வெற்றிக்கும் உரியதாகும். வளமை, நரி, அரிசி, தேயிலை, மது, தொழில்துறை, வேளாண்மை, வணிகம், கருங் கொல்லர் ஆகிய அனைத்துக்கும் ஓ இனாரியே காவல் தெய்வம் ஆகும். இனாரி என்ற தெய்வம் ஷிந்தோ மதத்தின் தெய்வமாகும், ஷிந்தோ மதத்திற்குரிய இனாரி கோவில்கள் பௌத்த மதம் ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்த பின்பு டாகினி கோவில்களாக மாற்றப்பட்டன.

இவ்வாறு இந்தியாவில் காளியும் இடாகினியும் ஒன்றுக்கொன்று தொடர்பு உடையனவாக உள்ளன. இவை இரண்டும் பல்வேறு மாற்றங்களை காலப்போக்கில் அடைந்துவிட்டன. ஆனால் இங்கிருந்து ஜப்பானுக்கு சீனா வழியாக சென்ற டாகினி அங்கு டாகினி தென் என்ற பெயரில் அன்று முதல் இன்று வரை எவ்வித மாற்றமும் அடையாமல் ‘காவல் தெய்வமாக’ போற்றப்படுகிறாள்.





பென்சாயின் தென்

# 7. சரஸ்வதி - பென்சாயின் தென் வழிபாடு

இந்தியாவில் ரிக் வேத காலம் தொட்டு சரஸ்வதி மிக முக்கிய இடத்தைப் பெற்றிருந்தார். வீணா வாகினி, புஸ்தக தாரிணி என்று அழைக்கப்பட்டாள். சிந்தாமணி என்னும் வரம் தரும் மணி வைத்திருந்ததனால் சரஸ்வதியை சிந்தாதேவி என்று அழைத்தனர். அவள் விரும்பிய வரங்களை அருள்வாள் என்று மக்கள் நம்பினர். சரஸ்வதி ரிக் வேத காலத்தில் நீர் தேவதையாக அறியப்பட்டாள். பின்னர் அவள் வாக்குக்குரிய தெய்வமாகப் போற்றப்பட்டாள். இதே மாற்றம் ஜப்பானிலும் பௌத்த சரஸ்வதியான பென்சாயின் தென்னிடமும் காணப்பட்டது. அங்கு சரஸ்வதி ஓர் இசைக்கருவியுடன் காட்சி அளிக்கிறாள். இங்கு கூத்தனூரில் இருக்கும் வீணையுடன் கூடிய சரஸ்வதி பௌத்த சரஸ்வதியின் மிச்ச சொச்சம் ஆகும். பௌத்த சமயத்தில் வெற்றிக்குரிய தெய்வமாகவும் காவல் தெய்வமாகவும் அதிர்ஷ்டத்தை அள்ளி வழங்கும், தெய்வமாகவும், கலைகளுக்கு உரிய



கூத்தனூர் சரஸ்வதி

தெய்வமாகவும் அவளது செல்வாக்கு விரிவாக்கம் பெற்றது.

இந்தியாவில் வாழ்ந்த பௌத்த சமயத்தினர் ஐந்து வகை சரஸ்வதிகளை வணங்கினர். அவை, மகாசரஸ்வதி, வஜ்ஜிர வீணா சரஸ்வதி, வஜ்ர சாரதா, ஆரிய சரஸ்வதி, சரஸ்வதி. சரஸ் என்றால் தண்ணீர் என்பது பொருள். எனவே தண்ணீருக்குரிய தெய்வமாக ஆதியில் வணங்கப்பட்ட சரஸ்வதியை சமஸ்கிருதத்தில் சுரசவதி என மாற்றி வாக்குக்குரிய தெய்வமாகப் போற்றத் தொடங்கினர்.

*தாய்களில் சிறந்தவள்;*

*நதிகளில் சிறந்தவள்;*

*தெய்வங்களில் சிறந்தவள்*

*சரஸ்வதி*

*என்று ரிக் வேதம் [2;41.16] சரஸ்வதியைத் தூய்மைத் தெய்வமாக கருதிப் போற்றுகிறது. ஜப்பானிலும் இதே நம்பிக்கை நிலவுகிறது. சீனாவில் பியான் சாயிதியான் என்றும் பர்மாவில் தீபிடக மேதாவ் என்றும் சரஸ்வதியைக் குறிப்பிடுகின்றனர். பௌத்த சமயத்தில் சரஸ்வதி முக்கிய தெய்வமாவாள். மஞ்சுஸ்ரீ என்றும் அழைக்கப்பட்டாள். இவளது நான்கு கைகளும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவற்றைக் குறித்தன.*

***வடவாக்கினியை குளிர்வித்த சரஸ்வதி***

*வடவாக்கினியை குளிர்வித்த சரஸ்வதி கதை சைவ சமய எழுச்சி ஏற்பட்டு, சிவபெருமான் தனிப்பெருந்தெய்வமாகப் போற்றப்படாத காலத்தில் உருவானதாகும். கேகயருக்கும் பார்கவருக்கும் கடுமையான போர் வந்த போது உலகத்தையே அழிக்கும் சக்தி பெற்ற வடவாக்கினி என்ற அக்கினி தோன்றியது. அதன் வெம்மை தாளாமல் அனைவரும் சிவபெருமானிடம் சென்று வேண்டினர்.*

அவரோ சரஸ்வதியிடம் செல்லுங்கள் என்றார். சரஸ்வதி ''என் கணவர் பிரமனின் அனுமதியின்றி நான் தீயை அணைக்க முடியாது'' என்றாள். பின்னர் அனைவரும் பிரமனை நாடவும் அவர் சரஸ்வதியை நதியாகப் பாய்ந்து போய் வடவாக்கினியை கடலுக்குள் இழுத்துச் சென்று அமிழ்த்துவிடும்படி கூறினார். சரஸ்வதியும் அவ்வாறே செய்தாள். இக்கதையும் சரஸ்வதி என்றால் நீருக்குரிய தெய்வம் என்பதை உறுதி செய்கிறது.

**அத்தி வரதர் கோவில் சரஸ்வதி கதை**

வைணவம் தெற்கே தழைத்தோங்கி திருமால் தனிப்பெரும் தெய்வமாக உருவாகி விட்ட காலத்தில் புனையப்பட்ட மற்றொரு கதையைக் காணலாம். 40 ஆண்டுகளுக்கு ஒருமுறை தெப்பத்தில் மூழ்கியிருந்த அத்திவரதரை வெளியே எடுத்து வழிபாடுகள் செய்யும் சிறப்புடைய வரதராஜப் பெருமாள் கோவிலில் வழங்கப்படும் தெய்வத் திருக்கதையைக் கேட்டால் பௌத்தத்தில் சரஸ்வதிக்கு இருந்த சிறப்பு தெரியவரும். பௌத்தம் சிறப்புற்று இருந்த காலத்தில் காஞ்சிபுரம் சத்திய விரத சேத்திரம் என்று அழைக்கப்பட்டது. அவ்வூரில் பிரம்மன் ஒரு யாகம் நடத்தினார். தன்னுடைய யாகத்திற்கு அவர் சரஸ்வதியை அழைக்கவில்லை. தன்னை



அத்திவரதர்

அழைக்காமல் யாகம் நடத்துவது கண்டு சினந்த சரஸ்வதி யாகம் நடந்த இடமான காஞ்சிபுரத்தை இருளில் மூழ்கடித்தாள்.

*பிரம்மன் இந்திரனிடம் சென்று தன்னுடைய யாகத்தை சிறப்பாக நடத்தித் தரும்படி வேண்டினான். இந்திரன் பிரமனைத் தன்னுடன் அழைத்து கொண்டு, திருமாலிடம் சென்றான். திருமால் விளக்கொளிப் பெருமாளாக வந்த வெளிச்சம் கொடுத்து பிரம்மனுக்கு உதவினார். அது கண்டு கோபமுற்ற சரஸ்வதி மகா கருங்காளியை உருவாக்கினாள். கருங்காளி திருமாலுடன் போரிட்டு தோற்றுப் போனாள். கருங்காளிக்கு, அத்திவரதர் கோவிலில் இருந்து ஒரு மைல் தொலைவில் கோவில் உண்டு. நெருப்பினால் எரிந்த திருமால் தெப்பக் குளத்தின் தண்ணீருக்குள் குளிர்ச்சிக்காக வைக்கப்பட்டார்.*

*இக்கதையில் பௌத்த அம்சமாக வருவன. பிரம்மன் செய்த யாகம், அந்த யாகத்துக்கு அழைக்கப்படாததால் சினமுற்ற பெருந் தெய்வமான சரஸ்வதி, அவளுடைய அம்சமான எட்டுக் கரங்களை உடைய கருங்காளி, பிரம்மன் தனக்கு உதவி வேண்டும் சமயத்தில் தேவர்களின் தலைவனான இந்திரனை நாடிச் சென்றது வரை குறிப்பிடலாம். பின்னர் பிரம்மனை இந்திரன் திருமாலிடம் அழைத்துச் சென்றதாகப் புனையப்பட்ட கதை வைணவ எழுச்சியின் சமயச் செல்வாக்கை உணர்த்துவதாகும்.*

பௌத்த சமயத்தில் பெருந்தெய்வமாக வணங்கப்பட்ட சரஸ்வதி இன்று இந்துக் கோவிலின் எங்கோ ஒரு மூலையில் இடம் பெறும் அளவுக்கு முக்கியத்துவம் இழந்து போனாள். வைதீகச் சமயங்களின் எழுச்சிக்குப் பிறகு தமிழகத்தில் பௌத்தர்கள் வணங்கி வந்த தாராதேவி பின்னர் திரவுபதி அம்மன் ஆயிற்று. வேறுபல பௌத்த பெண் தெய்வக்கோவில்கள் பொதுப்பெயரில் அம்மன் கோவிலாகி பின்னர் செல்லியம்மன், பேச்சி அம்மன் பெயர்களிலும் வழங்கப்பட்டது. (மதுரையில் இருக்கும் செல்லியம்மன் கோவிலை கண்ணகி கோவில் என்றும் கூறுவர்.) கேரளத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த சிந்தாதேவி கோவில் பல இடங்களில் அவ்வூர்த் தெய்வத்துடன் இணைந்தும் தனித்தும் பகவதி என்ற பொதுப்பெயரில் வழங்கலாயிற்று. இங்கிருந்து சீனாவுக்குச் சென்று அங்கிருந்து ஜப்பான் நாட்டிற்கும் சென்ற பௌத்த சமயம் ஜப்பானின் பூர்வீக சமயமான ஷின் தொயிசத்துடன் இணைந்து மண்ணின் பூர்வ தெய்வங்கள் பலவற்றைத் தன்னுடையதாக்கிக் கொண்டது.

### ஜப்பானில் சரஸ்வதி

ஜப்பானில் பிரம்மனை இந்திரனின் உடன் இருக்கும் தெய்வமாகக் காண்கிறோம். அங்கு

சரஸ்வதியை எமனின் அக்காவாகக் கருதுகின்றனர். அவள் பென்சாயின் தென் என வழங்கப்படுகிறாள். பௌத்த சமயத்தின் செல்வாக்கு மிக்க தெய்வமாக பென்சாயின் தென் என்ற பெயரில் சரஸ்வதி போற்றப்படுகிறாள். பௌத்த சட்டங்களுக்கான காவல் தேவதையாக விளங்குகிறாள். இசை, கவிதை, கல்வி, கலை ஆகியவற்றிற்குரிய தெய்வமாக வணங்கப்படுகிறாள். காலப் போக்கில் வீரமறவர்களான சாமுராய்களின் தெய்வமாகவும் உயர்த்தப்பட்டாள்.

### ஜப்பான் வரலாற்றில் சரஸ்வதி

ஏழாம் எட்டாம் நூற்றாண்டுகளில் சரஸ்வதி நதி, ஏரி போன்ற நீர் நிலைகளின் மகளாக வணங்கப்பட்டாள். நாட்டில் அதிகம் பேர் வணங்கும் தெய்வங்களில் ஒன்றாக விளங்கும் சரஸ்வதிக்கு இங்கு பீஃபா எனப்படும் இசைக்கருவியை மீட்டும் வடிவில் சிலை அமைக்கப்பட்டுள்ளது. ஜப்பானில் அதிர்ஷ்டம் தரும் ஏழு கடவுளருள் சரஸ்வதியும் ஒன்றாவாள். சரஸ்வதியை 'தேவ புத்த காமி' என்பர் அதாவது புத்தர்களின் தெய்வம். இத்தெய்வமே அதிர்ஷ்டத்தை அளிக்கும் தெய்வம் ஆவாள்.



*தமிழ்நாட்டிலிருந்து ஜப்பானுக்குச் சென்ற அயல் நாட்டு தெய்வங்களை தென் என்றும் (தெய்வம்), அம்மண்ணின் தெய்வங்களை காமி (சிந்தோயிசம்) என்றும் அழைப்பது மரபு. 'புத்த காமி' என்பது பௌத்தர்கள் ஏற்றுக்கொண்ட ஜப்பானிய மண்ணின் தெய்வம் ஆகும். அதாவது ஜப்பானில் வழிவழியாக*

வணங்கப்பட்டு வந்த ஓ இனாரி என்ற தெய்வத்தை சரஸ்வதியுடன் இணைத்து புத்த காமி என்று அழைத்தனர்.

பதினோராம் பன்னிரண்டாம் நூற்றாண்டில் பென்சாயின் தென் என்ற சரஸ்வதியை உகா ஜின் எனப்படும் தெய்வத்தின் ஜோடியாகவும் உயர்த்தினர். ஜப்பானில் உகா ஜின் என்பது பிரம்மன் கிடையாது. இது மனிதத் தலையும், பாம்பு உடலும் கொண்ட ஒரு தெய்வம் ஆகும். நம் நாட்டில் பதஞ்சலி இது போன்ற ஒரு உருவத்தை கொண்டவராவார் என்பதை இங்கு நினைவு படுத்துவது நலம்.

பனிரெண்டாம் பதிமூன்றாம் நூற்றாண்டில் பென்சாயிக் தென் தனித் தெய்வமாகப் போற்றப்பட்டாள். அப்போது சமுராய்களின் வழிபாடும் குறைந்து போயிற்று. டாகினி தென் [தமிழில் இடாகினி பேய்] இக்காலகட்டத்தில் சரஸ்வதியுடன் இணைக்கப்பட்டு வழிபடப் பட்டாள். மூன்று தலை நாகத்தின் தலையும் மனித உடலும் பத்து கைகளும் கொண்டவளாக உருவாக்கம் பெற்ற பென்சாயிக் தென் தன்னைச் சுற்றிலும் பல டாகினி தென்களையும் இனாரி எனப்படும் வெள்ளை நரிகளையும், பதினைந்து சீடர்களையும் மற்றும் பல வெள்ளை பாம்புகளையும், நரிகளையும் கொண்டிருந்தாள். வேளாண் தொழிலில் விளைச்சல் பெருகவும்

அதிர்ஷ்டங்கள் கூடி வரவும் ஜப்பானியர் பென்சாயிக் தென் என்ற சரஸ்வதியை வணங்கினர்.

பதினான்காம் நூற்றாண்டில் சரஸ்வதியும், டாகினியும், விநாயகரும் என மூன்று தெய்வங்கள் ஒன்றோடு ஒன்று இணைக்கப்பட்டு வழிபடப்பட்டன. டாகினி தென், காங்கி தென் மற்றும் பென்சாயின் தென் ஆகிய மூன்றும் இணைந்தன.

காமகோரா என்ற பேரரசு ஆட்சி செய்த காலத்தில் நிர்வாணமான உருவத்துடன் விளங்கிய பென்சாயிக் தென்னுக்கு வழிபாட்டுச் சமயச் சடங்குகளின் போது உடை உடுத்தப்பட்டது. பதினாறாம் நூற்றாண்டில் ஏதோ [Edo] அரச பரம்பரையினர் காலத்தில் இளைஞர், கலைஞர், ஓவியர், சிற்பி, எழுத்தாளர், போன்றோர் பென்சாயின் தென்னை வணங்கினர். இன்றைக்கும் ஜப்பானில் எல்லா ஊர்களிலும் முக்கிய நகரங்களிலும் பென்சாயின் தென்னுக்கு கோவில் இருப்பதை காணலாம்.

### இங்கு இந்திரன், சரஸ்வதி டாகினியின் நிலை மாற்றம்

இந்தியாவில் இருந்து பௌத்த தெய்வமான சரஸ்வதி ஜப்பானுக்குச் சென்ற போது

இங்கிருந்தது போல அங்கும் தண்ணீரின் தெய்வமாகவே எடுத்துச் செல்லப்பட்டு அவள் அங்கு வணங்கப்பட்டாள். பின்னர் காலப்போக்கில் சமுராய்களின் தெய்வமாகி அதிஷ்டம் தரும் தெய்வமாகி பௌத்த சட்டங்களின் காவல் தெய்வமாகி கலைகளின் கடவுளாகி பன்முக தகுதி பெற்றவளாக உயர்த்தப்பட்டாள். ஆனால் இங்கு சைவ வைணவ சமயங்களின் எழுச்சியால் பிரமனும் சரஸ்வதியும் முக்கியத்துவம் இழந்தனர். இந்திரனைப் போலவே பிரமனும் சாபத்துக்கு உள்ளாக்கப்பட்டு சிவன் விஷ்ணு வழிபாடு செய்து பாவ விமோசனம் பெற்றதாக தல புராணங்கள் தோன்றின. இதனால் இவர்களுக்கு இங்கு கோவிலோ சன்னிதியோ இல்லாத நிலை உருவாயிற்று. இதே நிலை பௌத்தத்தில் தர்மத்தின் கடவுளாக வழிபடப்பட்ட எமதருமனுக்கும் உருவாயிற்று. ஜப்பானில் எமன் சரஸ்வதியின் தம்பியாக நன்னிலை பெற்று இன்றும் வணங்கப்படுகிறான். இங்கு உயிர் கொல்லி ஆக்கப்பட்டான். டாகினியும் இடுகாட்டில் பிள்ளை தின்னும் பேய் ஆக்கப்பட்டாள். அங்கோ டாகினி இன்னும் வணங்கப்படுகிறாள். ஜப்பானில் மூவரும் தெய்வங்களாகத் தொடர்ந்து போற்றப்பட்டு வருகின்றனர்.



***பிற்சேர்க்கை***

# ***ஜப்பானியத் தொன்மக்கதைகள்***

*தொன்மக்கதை [MYTH] என்பது **இயற்கையான நிகழ்வுகளுக்கு மனிதன் தன் கற்பனையால் காரணம் கற்பித்து உருவாக்கும்** கதை ஆகும். தொன்மங்கள் எல்லா மொழியிலும் எல்லா நாட்டிலும் வழங்குகின்றன. நாம் ஜப்பானில் வழங்கும் இரண்டு தொன்மக் கதைகளை மட்டும் இங்கே காண்போம்*

## ***கதை 1 நிலாவில் ஒரு முயல் குட்டி***

*புத்த ஜாதகக் கதை ஒன்றில் நிலாவில் முயல் குட்டி ஒன்று இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஒரு முழு நிலா நாள் அன்று ஏதேனும் ஒரு தர்ம காரியம் செய்து புண்ணியம் தேட வேண்டும் என்று சில விலங்குகள் ஆசைப்பட்டன. ஒரு குரங்கு ஒரு நீர் நாய் ஒரு குள்ள நரி மற்றும் ஒரு முயல் ஆகியன சேர்ந்துதிடமிட்டன.*

*ஒரு வயதான தாத்தா பிச்சையெடுத்து வருவதைப் பார்த்த குரங்கு அவருக்கு பழங்கள் பறித்து கொடுத்தது. நீர் நாய் அவருக்கு ஏரியில்*

இறங்கி மீன்களைப் பிடித்துச் சுட்டு தின்ன கொடுத்தது. குள்ள நரியோ அதன் குணம் மாறாமல் ஒரு தயிர்ச் சட்டியை திருடிக் கொண்டு வந்து கொடுத்தது. முயலுக்கோ தான் என்ன கொடுப்பது என்று தெரியவில்லை. முயலுக்குப் புல் பறித்து தின்ன மட்டும் தான் தெரியும். தாத்தாவுக்குப் புல்லை எப்படி சாப்பிடக் கொடுப்பது என்று மனம் குழம்பிய முயல் தன்னையே உணவாகக் கொடுக்க முடிவு செய்தது. உடனே அங்கு குளிர்காய தாத்தா வளர்த்திருந்த நெருப்பில் குதித்துவிட்டது. தீயில் சுட்ட முயல் கறி ருசியாக இருக்கும். தாத்தா ரசித்து ருசித்துச் சாப்பிடுவார் என்று முயல் நினைத்தது.

நெருப்பில் விழுந்த முயல் சாகவில்லை. தன் உயிரையே நெருப்பில் தியாகம் செய்ய துணிந்த முயலுக்குச் சந்திரனில் நிரந்தர இடம் வரமாகக் கிடைத்தது. அதனால் தான் அந்த முயல் தெளிவாகத் தெரியாமல் நெருப்புப் புகையின் ஊடே கலங்கலாகத் தெரிகிறது என்று ஜப்பானியர் நம்புகின்றனர்.

இந்தக் கதை புத்த மதம் பரவியிருக்கும் ஜப்பான், கொரியா, ஸ்ரீலங்கா, தாய்லாந்து, வியட்னாம், கம்போடியா, மியன்மார் போன்ற பல்வேறு ஆசிய நாடுகளிலும் வழங்குகிறது. இக்கதையை நினைவு கூரும் வகையில்

*ஜப்பானில்* ***த்சுகுமி*** *என்றும், கொரியாவில்* ***சுசியோக்,*** *என்றும் சீனா மற்றும் வியட்னாம் நாடுகளில் வேறு பெயர்களிலும் இலையுதிர்கால இடைத் திருவிழா இன்றும் கொண்டாடப்படுகிறது.*



### ***கதை 2 - பகலில் சந்திரன் வருவதில்லையே ஏன்?***

*இரவில் மட்டும் சந்திரன் வருவது ஏன்? பகலில் வருவதில்லையே என்பதற்கு ஜப்பானியர் உருவாக்கிய கற்பனைக் கதை இதோ . . .*

*ஜப்பானில் சந்திரன் ஆண் கடவுள்; சூரியன் பெண் கடவுள் ஆகும். இம் மொழியில்* ***த்சுகி*** *என்றால் நிலா.* ***த்சுகி யோமி*** *என்றால் சந்திரக் கடவுள். சந்திரன் ஆரம்பத்தில் இசாநாகி என்ற தலைமைக் கடவுளின் வலது கண்ணாக இருந்தான். அவனுக்கு ஒரு சகோதரி இருந்தாள். அவள் தான் சூரியா. அவளது பெயர்* ***அமெதெரசு****. இருவரும் சொர்க்கத்தில் வசித்தனர்.*

*ஒரு நாள் சூரியா தன் பிரதிநிதியாக உகே மோசி என்ற உணவுக்கடவுளை சந்திரனிடம் அனுப்பினாள். ஆனால் சந்திரன் உகே மோசியைக் கொன்றுவிட்டான். தன் நண்பரைக்*

கொன்ற சந்திரன் முகத்தில் விழிக்க சூரியா விரும்பவில்லை. அன்று முதல் சந்திரன் இருக்கும் இரவு நேரத்தில் சூரியா, தான் வருவதில்லை என்று சபதம் செய்தாள். இதனால் தான் இரவில் சூரியனைக் காண முடிவதில்லை!. இரவில் சந்திரனை மட்டும் காணலாம்!!!.



### கதை 3 - பிசாசுகளைத் துரத்திய பழக்குமரன் மொமொ தொரோ

ஜப்பானில் ஒரு ஊரில் வயதான பாட்டி ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் தினமும் அந்த ஊரில் இருந்த ஆற்றங்கரைக்குச் சென்று துணிகளைத் துவைத்து அங்கேயே உலர்த்தி எடுத்து வருவார். ஒரு நாள் அவருக்கு ஒரு பழம் கிடைத்தது. அப்பழத்தைத் தன் கணவருக்கு கொடுப்பதற்காக எடுத்து வந்தார். அவரோ இருவரும் ஆளுக்கு பாதி சாப்பிடலாம் என்றார். பாட்டி அந்தப் பழத்தை நறுக்கிய போது அதில் இருந்து ஒரு அழகான சிறுவன் தோன்றினான். அவனைப் பாட்டி பழச்சிறுவன் என்ற பொருளில் மொமொ தரொ என்று அழைத்தார். அவனும் வளர்ந்து பெரியவன் ஆனான்.

*பழக்குமரன் வீட்டு வேலைகளில் பாட்டிக்கும் தாத்தாவுக்கும் அவன் மிகவும் உதவினான். அந்தக் கிராமத்தில் வாழ்ந்தவர்களை பல பிசாசுகள் துன்புறுத்தி வந்தன. அவை அருகில் இருந்த ஒரு தீவில் இருந்து வருவதை மொமொ தரோ அறிந்துகொண்டான். உடனே பாட்டியிடம், தான் பிசாசுகளைக் கொல்லப் போவதாகவும், தனக்கு வழியில் சாப்பிட கொழுக்கட்டைகள் செய்து தரும்படியும் கேட்டான். பாட்டி வெகு நேரம் வரை பசி தாங்கக்கூடிய நல்ல சத்து மிக்க கொழுக்கட்டைகளைச் செய்து தந்தார்.*

*மொமொ தரோ பாட்டி தந்த கொழுக்கட்டைகளை எடுத்துக் கொண்டு கிளம்பினான். போகிற வழியில் பசியோடு இருந்த நாயைக் கண்டான். அதற்கு இவன் ஒரு கொழுக்கட்டையை கொடுத்தான். உடனே அந்த நாய் அதைச் சாப்பிட்டுவிட்டு வாலை ஆட்டிக்கொண்டு இவனுடன் நடந்தது.*

*மொமொ தொரோவும் நாயும் சிறிது தூரம் சென்றதும் அங்கு ஒரு மரத்தடியில் வாடிப்போய் இருந்த குரங்கைக் கண்டனர். அதற்கும் மொமொ தொரோ ஒரு கொழுக்கட்டை கொடுத்தான். அதைச் சாப்பிட்ட குரங்கு கொஞ்சம் உடல் தேறி*

இவர்களுடன் சேர்ந்துகொண்டது. மூவருமாக பிசாசு தீவுக்கு சென்றனர்.

பிசாசுகள் இவர்களைக் கண்டதும் கோபமாக வந்து சண்டை போட்டன. நாய் ஓடிப்போய் பிசாசுகளின் காலைக் கடித்தது. அவற்றை ஓடவிடாமல் தடுத்தது.. குரங்கு பிசாசுகளின் தலையைத் தம் நகங்களால் சுரண்டி காயப்படுத்தியது.. பிசாசுகளின் தலையில் இருந்து ரத்தம் வடிந்தது. காயம் பட்ட பிசாசுகள் ஓடிவந்து மொமொ தொரோவுடன் சண்டை போட முடியாமல் திணறின. மொமொதொரோ பிசாசுகளுடன் அதிக பலத்துடன் மோதினான். காயம்பட்ட பிசாசுகள் ரத்தம் சிந்தியபடி அந்த தீவை விட்டு ஓடிவிட்டன.

பிசாசுகள் ஓடிப்போனதும் மொமொதொரோ அவை சேர்த்து வைத்திருந்த பொக்கிஷத்தை எடுத்துக்கொண்டு வந்து தன் பாட்டியிடம் கொடுத்தான். பாட்டி அதை தன் அருகில் வாழ்ந்த அனைவருக்கும் பகிர்ந்து கொடுத்தார். அதற்கு பிறகு அவர்களுக்குப் பிசாசுத் தொல்லையே இல்லை.

நம் ஊரிலும் இப்படி ஒரு கதை உண்டு. ஒரு காலத்தில் தீபாவி என்று ஒரு கொடூரன் ஒரு மலைக்குகையில் வாழ்ந்து வந்தான். அவனுக்கு

அருகில் உள்ள கிராமங்களில் இருந்து ஒரு நாளுக்கு ஒருவரை உணவாக அனுப்பி வைப்பது வழக்கம் அல்லது அவன் ஊருக்குள் வந்து கண்ணில் கண்டவரை எல்லாம் தூக்கி எறிந்து அடித்து உதைத்து கொன்று போடுவான்.

ஒரு நாள் ஒரு பாட்டி வீட்டு முறை வந்தது. அந்த பாட்டி தாத்தாவுக்கு குழந்தைகள் இல்லை. அதனால் யாரை அனுப்புவது என்று தெரியாமல் அழுதுகொண்டே இருந்தனர். அப்போது வெளியூரைச் சேர்ந்த ஒரு இளைஞன் அந்தப் பாட்டிக்கு உதவ முன்வந்தான். அவன் மலையில் வாழும் அரக்கனுக்கு உணவாகப் போக சம்மதித்தான். வழக்கம் போல அரக்கனிடம் இருந்து வண்டி வந்தது. அதில் அவன் ஏறிக்கொண்டான். பாட்டி அரக்கனுக்கு வேண்டிய உணவுகளைச் சமைத்து பெரிய பானைகளில் கொண்டுவந்து ஏற்றினார். அந்த வண்டி மாடுகள் வழக்கம் போல மலைக்குகைக்கு சென்றன.

குகை அருகில் வண்டி சென்றதும் இளைஞன் குகையில் இருந்த அரக்கனை சண்டைக்கு அழைத்தான். வெளியே வந்த அரக்கனை இளைஞன் அருகில் இருந்த பனை மரத்தைப் பிடுங்கி அடித்துக் கொன்றான். வண்டி மாடுகள் திரும்பிவிட்டன. கிராமத்தினரும் வண்டியில் போன

*இளைஞனை அரக்கன் கொன்று தின்றுவிட்டான் எனறு நம்பினர். ஆனால் வெற்றி வீரனான அந்த இளைஞன் அரக்கனின் உடலை தரதரவென்று இழுத்தபடி நடந்து வந்தான். ஊர் மக்கள் ஆரவாரம் செய்தனர். தீபாவியை அழித்த அந்த நாளை ஆண்டுதோறும் தீபாவளி என்று கொண்டாட முடிவு செய்தனர்.*

*தீபாவளி ஏன் கொண்டாடுகிறோம் என்பதற்கு முகவை மாவட்டத்தில் சொல்லப்படும் கதை இது. இந்த இளைஞனை பீமன் என்றும் பேர் சொல்லி சிலர் இதே கதையைச் சொல்வதுண்டு.*



## முனைவர் செ.இராஜேஸ்வரி அவர்களின் பிற நூல்கள்


























### இந்நூல் பற்றி

இந்நூல் முழுமையையும் வாசித்து முடிக்கையில் **"சமயம் என்பது மனித சமுதாயத்தின் கண்டுபிடிப்பு"** என்ற கருத்துக்கு வருவதுடன் மதம் முன்னிறுத்துவது சடங்குகளையோ, மதத்தையோ அல்ல; மனிதனையே மதம் முதன்மைப்படுத்துகிறது என்ற கருத்துக்கு ஒரு வாசகன் வந்துவிட முடியும். உலக மதங்கள் முழுமையும் ஓர் எல்லையற்ற ஆற்றலைக் கடவுள் (Supernatural Power) என்று கொண்டு; அவற்றிடம் நன்மை பெறவும், தீமையிலிருந்து தம்மைக் காக்கவும் வேண்டிட பல சடங்குகளைத் தோற்றுவித்திருக்கின்றன. இச்சடங்குகள் அவரவர் நிலம், பண்பாடு சார்ந்து மாறுபடுகின்றன அவ்வளவே. ஆனால் எல்லா மதமும் மனிதனை முன்னிலைப்படுத்தியே செயல்படுகின்றன என்பதே இந்நூல் முன்வைக்கும் கருத்து. ஜப்பானை அறிந்துகொள்ள விரும்பும் யாரும் இந்நூலைப் படிக்கலாம். இதுபோன்ற பல நூலை எழுதிடுமாறு முனைவர் செ. ராஜேஸ்வரி அவர்களை வேண்டி விரும்பிக் கேட்டுக் கொள்கின்றேன்.

**முனைவர் தே. ஞானசேகரன்**
பேராசிரியர் மற்றும் தலைவர், தமிழ்த்துறை

**₹ 200/-**